ஊழியன்

மலர் 19, இதழ் 42

April 18, 1940

Record no. 148

REG. NO. M. 3888 12 பக்கங்கள் விலை அணு ஒன்று

சந்தா விகிதம்
உள்நாடு வருடச் சந்தா ... 5—0—0
பர்மா வருடச் சந்தா .... 6—0—0
வெளிநாடு வருடச் சந்தா .... 7—0—0

# ஊழியன்

விளம்பர விகிதம்
அங்குலம் 1-க்கு வாரம் 1-க்கு 0—8—0
நீடிமன்ற விளம்பரம் அங். 1-க்கு 1—0—0
ஒப்பந்த விளம்பரத்திற்கு மானேஜருக்கு எழுதவும்

(தேசீய வாரப் பத்திரிகை)

வியாழன் தோறும் வெளிவருவது

மலர் 19 | காரைக்குடி, விக்கிரம௵ சித்திரைமீ 6உ. வியாழன் (18—4—1940) | இதழ் 42

'ஹரிஜன் கட்டுரைகள்' மகாத்மாவின் மணிமொழிகள்

# 'அஹிம்ஸா மூலம் அநீதியை அகற்றுவேன்'

## ஏழைகளுக்கு 5 கோடி ரூபாய்

### அமெரிக்கருக்கு காந்திஜியின் பதில்

### காக்ஸார் ஸ்தாபனம்

காக்ஸார்ஸ்தாபனம் சட்ட விரோதமானதென்று சர்க்காரால் அறிவிக்கப்பட்டது என்றும் காந்திஜியின் தலைமையில் நடத்தப்படும் அஹிம்ஸா இயக்கத்துக்கு விரோதமானதென்றும் அந்தத் தடை நீக்கப்படலாமென்று நம்புவதாகவும், அப்படி நடந்தால் அது காங்கிரஸின் சாத்தியமில்லாத மனப்பான்மையினால்தான் என்றும் மொத்தம் 11 மாகாணங்களில் ஏழில் முட்டுக்கட்டையை உண்டுபண்ணியதினாலேயே இந்நிலைமை ஏற்பட்டதாக கருதுவதாகவும் பிரிட்டிஷார் ஆரம்பத்திலிருந்தே பிரித்தாளும் கொள்கையைக் கையாண்டுவருகிறார்களென்பதில் சந்தேகமில்லை யென்றும் ஆனால் முஸ்லீம்களின் உதவியை மேற்கொண்டே பிரிட்டிஷார் ஆளுவதற்குக் காரணமாயிருக்கிறதென்றும் ஓர் பஞ்சாபி மகாத்மாவுக்குஎழுதியிருக்கும் கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார்'

### மகாத்மா பதில்

காக்ஸார் இயக்கம் ராணுவ ஸ்தாபனம் போன்றது என்பதில் ஆட்சேபனையில்லை. எந்த சர்க்காரும் தனியான இவ்வித ஸ்தாபனத்தை அநுமதிக்க முடியாது. இதனால் பொதுஜன சமாதானத்துக்குப் பங்கம் ஏற்படும். பஞ்சாப் சர்க்கார் காக்ஸார் இயக்கத்தை பழையபடி நடத்த அனுமதிக்கமாட்டார்களென்று நம்புகிறேன். காக்ஸார்களுக்கு அவ்வித சலுகை காட்டினால் சீக்கியர்களையும் மற்றவரையும் அவ்விதமே நடத்தவேண்டும். இதனால் தொல்லைதான் விளையும்.

### மந்திரிகள் விலகியதேன்?

காங்கிரஸ் மந்திரிகள் விலகியதுதான் இந்நிலைமைக்குக் காரணம் என்று நிருபர் சொல்வதைமட்டும் நான் ஒப்புக்கொள்ளவில்லை. இந்தியாவை யுத்தத்தில் சம்பந்தப்பட்ட நாடாகப் பிரிட்டிஷார் செய்ததைக் கண்டிக்கவும், யுத்த சம்பந்தமாக சில எதேச்சாதிகார காரியங்களைச்சர்க்கார் நடத்தியதைக் கண்டிக்கவும் காங்கிரஸ் மந்திரிகள் விலகினார்கள். ராஜினமா செய்தது மிக்க நிதானமுறையேயாகும். காங்கிரஸ் மந்திரிகள் நீடித்திருந்தால் வகுப்புச் சச்சரவு அதிகப்பட்டிருக்கும். காங்கிரஸ் அஹிம்ஸாக் கொள்கையை அநுஷ்டிக்கும் வரை அது பொதுஜனங்களின் ஆதரவின்றி நாட்டின் நிர்வாகத்தை நடத்தமுடியாது. வோட்டுகள் மூலம்மெஜாரிட்டி பெறுவதுமட்டும் போதாது. பிரிட்டிஷார் ஆயுதபலத்தால் காங்கிரஸ் அதிகாரம் வகித்துவர அநுமதியேன்.

### நிலைக்க முடியாது

வகுப்பு ஒற்றுமையில்லையானால் காங்கிரஸ் மந்திரிசபையே நிலைக்க முடியாது. அஹிம்ஸா ஒழுக்கம் இல்லையானால் உண்மையான சுயேச்சையும் கிடைக்காது. போட்டி ஸ்தாபனங்கள் ஏற்படுத்துவதால் பயனில்லை. என் பிரியப்படி காரியங்கள் நடப்பதானால் காக்ஸாரின் பலாத்காரச் செயல்களை அஹிம்ஸையால் வெல்லும்படியே செய்வேன். காக்ஸார் கிளர்ச்சியால் ஏற்பட்ட உயிர்ச் சேதத்தைப்பற்றி இப்போது ஒன்றும் சொல்லவில்லை.

### இந்தியாவை துண்டிக்க சம்மதியேன்

நவாப் லியகத்தலிகானின் அறிக்கைக்குப் பதிலளிக்கையில் மகாத்மா இவ்வார 'ஹரிஜனி'ல் குறிப்பிட்டிருப்பது:—

வகுப்புப் பிரச்னையைப்பற்றி நான் ஒருவருடனும் ஹிந்து என்ற முறையில் பேசியதில்லை. அம்மாதிரிபேச எனக்கு அதிகாரம் கிடையாது. காங்கிரஸ்காரன் என்ற ஹோதாவிலேயே நான் பேசியிருக்கிறேன். எந்தக் காங்கிரஸ்காரரும் காங்கிரஸ் அக்கிராசனர்கூட-ஒரு பிரதிநிதி என்றமுறையில்பேசமுடியாது. இப்பொழுது நான் விடுக்கும் பதிலைக்கூட என்னுடைய சொந்தக் கருத்தாகத்தான் கொள்ளவேண்டும். இந்திய முஸ்லீம்கள் தாங்கள் உத்தேசித்துள்ள பிரிவினை யோசனையை வற்புறுத்தினால் அஹிம்ஸையைக்கையாளுபவன் என்றமுறையில் அதை எதிர்த்துப் போராட என்னாலியலாது. எனினும் இந்தியாவைத் துண்டு செய்வதற்கு நான் ஒருநாளும் உடந்தையாக இருக்கமுடியாது. அதைத் தடுக்க அஹிம்ஸா பூர்வமாக எனக்குத் தெரிந்த வழிகளையெல்லாம் அநுஷ்டிப்பேன். பிரிவினையென்பது சுத்த அசத்தியமானதாகும். ஹிந்து மதமும் இஸ்லாம் மதமும் ஒன்றுக்கொன்று விரோதமான கலைகளையும் தத்துவங்களையும் கொண்டவை என்று சொல்லப்படுவதைக் கேட்டால் என் ஆத்மாவே கொதித்தெழுகிறது. நாமெல்லோரும் ஒரே தெய்வத்தின் குழந்தைகள். அரசியல் நிர்ணய சபையில் இந்தப் பிரச்னையை வெகு சுலபமாகத் தீர்க்கலாம்.

### சட்டமறுப்பு

சட்டமறுப்பைப்பற்றி நான் பேசுகிறேனென்றால் மற்றவர்களைப் போலவே முஸ்லீம் பாமரமக்களும் சுதந்திரத்தை விரும்புகின்றனர் என்று நான் இன்னமும் நம்புவதால்தான். சட்டமறுப்பு சக்திவாய்ந்த ஆயுதமாகவிருக்கும்; உலக மக்களின் அபிப்பிராயத்தைத் திரட்டவும் அது உதவும். ஆனால் ஒரு விஷயம். பூர்ண அஹிம்ஸை அநுஷ்டிக்கப்படுமென்ற நிச்சயமில்லாமல் சட்டமறுப்பில் இறங்கமாட்டேன். தன்னுடைய அரசியலைத் தயாரிக்கும் அதிகாரம் இந்தியாவிற்குக் கிடைக்கையில் தங்கள் எதிர்காலத்தை நிர்ணயிப்பதில் முஸ்லீம்களுக்குக் கண்டிப்பாக அதிகாரமிருக்கும். மெஜாரிட்டியின் வோட்டு பலத்தால் அது முடிவு செய்யப்படாது; முடிவு செய்வுமியலாது. எல்லாக் கலைகளும் பூர்ணத்துவமடைய வேண்டுமென்பதே என் மதம்.

### போராட்டம் ஆரம்பித்தால்?

—

#### சுபாஷ் பாபுவின் கருத்து

நாம் கோரும் சுயராஜ்யத்தில் விவசாயிகளுக்கும் தொழிலாளருக்கும் நிர்வாகத்தில் பங்கிருக்கவேண்டும். சில இந்திய முதலாளிகள் மட்டும் லாபமடைவதால் பயனில்லை. எங்களுக்கும் மகாத்மா முதலியோருக்கும் ஏற்பட்டுள்ள வித்தியாசம் ஒரு லக்ஷியத்தைப் பொறுத்த சாதாரண விஷயமே. சுயேச்சைப் போராட்டம் ஆரம்பிக்கப்பட்ட அடுத்த நிமிஷமே அந்த வித்தியாஸங்கள் மறைந்துவிடும்.

### சர்க்கா, சுயராஜ்யம், அஹிம்ஸை

சர்க்கா, சுயராஜ்யம், அஹிம்ஸை இம்மூன்றிற்குமுள்ள முக்கியமான தொடர்பைப்பற்றி மகாத்மா இவ்வார 'ஹரிஜனி'ல் குறிப்பிட்டிருப்பதாவது:—

கிராமமக்கள் நம்பி வாழக்கூடியது கைராட்டை. விவசாயத்தின் மூலம் கிட்டும் வருமானத்துக்கு இது உதவியாயிருக்கும். விதவைகளை ரக்ஷிக்கும். கிராமங்களிலிருந்து சோம்பலை ஓட்டும். இது விஷயத்தில் இந்தியாவை ஏனைய தேசங்களோடு ஒப்பிடலாகாது. ஏனெனில் அவைபிறநாடுகளைச் சுரண்டி வாழ்கின்றன. இந்தியாவோ சுரண்டப்படும் நாடுகளில் ஒன்று ஆகும். எழு லக்ஷம் கிராமங்களிலுள்ள ஏழைகளுக்கு கைராட்டை மூலம் இதுவரையில் 5 கோடி ரூபாய்கள் கிடைத்திருக்கின்றன. ஆதலால் தான் சர்க்கா மூலம் நாம் சுயராஜ்யத்தைப் பெறவேண்டுமென்று தயங்காமல் சொல்கிறேன். சுதந்திரம் வேண்டுமென்று துடிப்பவர்கள் ராட்டையை இகழ்வாகக் கருதுகிறார்கள். இரத்தம் சிந்தி விடுதலைபெற்ற நாடுகளைப்பற்றிப் பிரஸ்தாபிக்கிறார்கள். சுயராஜ்யத்தைப் பெறுவதற்கு அஹிம்ஸை ஒன்றுதான் வழி என 1919-ம் வருஷத்தில் எடுத்துரைக்கப்பட்டது. கைராட்டையே அஹிம்ஸையின் அடையாளம். இந்தியா இன்னம் அஹிம்ஸையைத் தன் உள்ளத்தில் கொள்ளவில்லை. அஹிம்ஸையின்றி சாத்வீக சட்டமறுப்பை நடத்த முடியாது.

### அமெரிக்கருக்கு மகாத்மா பதில்

பலாத்காரத்தில் ஈடுபட்டவருடன் ஒத்துழையாமலிருப்பது ஒன்று. கொடுங்கோல் புரிந்த நீரோ அரசனைப் போல் இந்தியாவில் ஒருவர் அவதாரமெடுப்பதாக வைத்துக் கொள்வோம். சர்க்காரின் பிரதிநிதிகள் அந்த அவதாரத்துக்கு இடம் கொடுப்பார்கள். அந்த அவதார புருஷனுக்கு ஜனங்களின் உதவி கிட்டாதென்பதையும் சொல்லிவிடுவார்கள். கீழ்ப்படிந்து அடங்கிக் கிடப்பதற்குப் பதிலாக அவர்கள் இறப்பதையே விரும்புவார்கள். அஹிம்சா முறையில் பயிற்சி பெற்றவர்கள் அஹிம்சா முறையிலே எதிர்ப்பார்கள். துப்பாக்கிகளின் முன்னும் படையெடுப்புகளின் முன்னும் நிராயுதபாணியாக நிற்பார்கள். கொடுங்கோலனுக்குக்கூட பச்சாத்தாபம் இல்லாமலிராது.

—

நமது தொடர்கதை

# தியாகம்



எஸ். கே. ஸ்வாமி

தமிழ்ப்பெண்மையின் அறவீரத்தையும் தியாக சீலத்தையும் எடுத்துக் காட்டும் நோக்குடன் சரித்திர ஜோடனையோடு இக்கதை அமைக்கப்பட்டிருக்கிறது. போர் என்பது மனிதரிடையே ஏற்படும் திடீர் உத்வேக உணர்ச்சியே என்றும், அதனால் மனித வர்க்கத்துக்கே பெருந் தொல்லைகள் விளையுமென்றும் சித்தரிக்கப்பட்டிருக்கிறது. தமிழ்நாடு தியாகபூமியாக அன்று தொட்டு விளங்கி வருகிறது என்பது பண்டைய சரித்திரம் போதிக்கும் உண்மை. பூர்வீகத் தமிழ்நாரிமணிகளின் தியாக மனப்பான்மையும் வீர உணர்ச்சியும் அளவிடற்கரியது. அரங்கமேடைகளிலும் ஸினிமாக் கதைகளிலும் இம்மாதிரியான கதைகளைத் தோன்றச் செய்வது நாட்டுக்கு நன்மையுடைத்து. எங்கும்யுத்தபீதி எழுந்திருக்கும் இவ்வேளையில் யுத்தத்தை தன்னுயிரையும், மேலான காதலையும் தூவென தியாகம் செய்த தமிழ்ப் பெண்மையின் அறவீரம் போற்றத் தக்கதல்லவா! நாடக அமைப்புக் குன்றாத முறையில் கவனமாக இக்கதை கையாளப்பட்டிருப்பது கூர்ந்து நோக்கத் தக்கதாகும்.

### முன் கதைச் சுருக்கம்

தெங்கநாட்டு மன்னவனின் ஏக புதல்வியான திலகவதி துளபநாட்டு இளவரசனிடம் காதல் கொண்டாள். காதலர்களின் முதல் சந்திப்பிலேயே திலகவதியை, எமன் வாயிலிருந்து ராஜகுமாரன் காப்பாற்றினான். திருமணம் நடக்க ஏற்பாடு செய்யப்பட்டது. அவ்வேளையில் சோணாட்டு அரசனின் திடீர் படையெடுப்பு. தந்தை எவ்வளவோ சொல்லியும் கேட்காமல் திலகவதி சோழநாட்டு சக்கிரவர்த்தியோடு புறப்பட்டுப் போகிறாள். இந்த சம்பவம் எல்லோரையும் ஆச்சரியத்திற்குள்ளாக்கியது. தனது சகோதரனைக் கொன்று சொந்தநாட்டையும் அழித்து பாழ்படுத்திய சோழநாட்டு மன்னவனை மனமார வெறுத்த திலகவதியின் போக்கில் மாறுதலைக்கண்டு வியப்பும் திகைப்பும் கொண்டார்கள் குடிஜனங்கள். திலகவதி அவ்வாறு செய்யாதிருந்தால் முன் போலவே பலம் பொருந்திய சோழசேனை பெரும் அழிமதிகள் தெங்கநாட்டில் செய்யுமென்பதற்கு ஐயமில்லை. மணமகனும் சம்பந்திகளும் வந்ததும் நிகழ்ந்தவற்றையறிந்து அவமானமடைந்து திரும்பிச் சென்றார்கள்—

## III

சோழச் சக்ரவர்த்தியின் அரண்மனை அந்தப்புரம்; திலகவதி தன்னந்தனியாகக் கன்னத்தில் கைவைத்துக்கொண்டு இருக்கிறாள். கண்ணீர் வடிகிறது. ஆனால் அவள் இதயத்தில் ஓர் திட எண்ணம் ஆட்சி செலுத்தியது. இவ் வேளையில் சக்கிரவர்த்தி அங்கு பிரவேசித்தான். பணிப் பெண்கள் வெளியே சென்றார்கள். சக்கிரவர்த்தியைக் கண்டதும் திலகவதி மரியாதையாக எழுந்து நின்றாள். பலவித விகார எண்ணங்களால் பீடிக்கப்பட்ட சோழச் சக்கிரவர்த்தி மெதுவான குரலில் இவ்வாறு கூறினான், "ராஜகுமாரீ, நான் உன்னை எவ்வளவு தூரம் நேசிக்கிறேன் என்பதை நீ அறிவாயா? கருணையுடன் என்னை ஏற்றுக் கொள். இந்த சாம்ராஜ்யத்திற்கே ராஜலெக்ஷ்மியாக விளங்குவாய்."

திலகவதி: சக்ரவர்த்தி, தயைசெய்து இம்மாதிரியான வார்த்தைகளை சொல்லக்கூடாது. தங்கள் கௌரவத்திற்கு சற்றும் பொருந்தாது. இந்த சாம்ராஜ்யம் மட்டுமல்ல; அகில உலகமே கிடைப்பதாயிருந்தாலும் எனக்கு வேண்டாம். பிரேமை என்பது நிர்ப்பந்தத்தால் வருவிப்பதல்ல. வானிலிருந்து மழைபொழிவது போல இயற்கையாகத் தோன்றவேண்டும். என் மனமானது ஒருவரிடம் இரண்டறக் கலந்துவிட்டது. அதைமாற்ற எந்த சக்திக்கும் ஆற்றல் இல்லை.

சக்ரவர்த்தி: இவையெல்லாம் கட்டுக் கதைகள். புத்தகத்தில் படித்து இன்புறத் தக்கவை. கேட்டு ரஸிக்கக்கூடியவை. அநுபவத்திற்கு பொருந்தாது. சரி, நீ ஏதோ இப்போது இம்மாதிரியாகப் பேசுகிறாய். நாளடைவில் உன் மனம் மாறிவிடும். நான் போய்வருகிறேன்.

திலகவதி: நான் சொல்வதெல்லாம் தங்களுக்கு கட்டுக்கதைகள் போலவே தோன்றும். என் மனம் திரும்பும் வேளையில் பார்த்துக் கொள்ளலாம். ஒருவார்த்தை. நான் ஆதியில் நினைத்ததுபோல அல்ல உங்களது நடவடிக்கை. அதுபற்றி எனக்கு பரம திருப்தியே.

தலைகுனிந்த வண்ணமாகவே சக்கிரவர்த்தி வெளிச் சென்றான். அவனுடைய இதயத்தில் பலவித எண்ணங்கள் மின்னல்போலத் தோன்றுவதும் மறைவதுமாயிருந்தன. அன்றிரவு நித்திராதேவி அவனை அணுகவில்லை. உள்ளத்தில் விசாரமிருந்தால் உறக்கம் வருமா? ராஜகுமாரியை பலாத்காரம் செய்வதற்கு சக்கிரவர்த்தியின் மனம் இடங்கொடுக்கவில்லை. நாளடைவில் அவள் மனமாற்றமடைவாள் என்ற நம்பிக்கை ஏற்பட்டது. தனது பெருமையையும் திறமையையும்பற்றி இதமாக எடுத்துரைத்து ராஜகுமாரியின் மனத்தை மாற்றுவதற்கு பல பணிப்பெண்களை ஏற்பாடு செய்தான். ஒவ்வொருநாளும் அவர்களோடு திலகவதியின் நிலைமையைப்பற்றி விசாரித்து வந்தான். திலகவதியோ எவரிடமும் ஒருவார்த்தைகூடப் பேசுவது கிடையாது. சதா சர்வகாலம் காதல் தெய்வத்தையே பூஜை செய்து வந்தாள். நாளுக்கு நாள் அரசகுமாரியின் முகம்வாடி, உடல் இளைத்து, உள்ளம் உருகி வருவதையறிந்த சோழ சக்கிரவர்த்தியின் மனத்தில் பச்சாத்தாபம் மெள்ள தலைக்காட்டத் தொடங்கியது. சில தினங்களாகத் திலகவதியை சந்திப்பதை விட்டுவிட்டான்.

ஒரு நாள் திடீரென்று சக்கிரவர்த்தி திலகவதியின் அறைக்குச் சென்றான். மரியாதையாக ராஜகுமாரி எழுந்து வணங்கி நின்றாள். சற்றுநேரம் இருவரும் ஒன்றுமே பேசவில்லை. வழக்கம் போல தாதியர் வெளியே போய்விட்டார்கள். மிகவும் சாந்தமாக சக்கிரவர்த்தி இவ்வாறு சொன்னான். "ராஜகுமாரீ! நான் தேவியை பலாத்காரமாக இங்குகொண்டு வந்துவிட்டேன் என்று நினைக்கலாம். இதனால் உனக்கு அளவு கடந்த விசனமிருக்கிறது என்பதை கொஞ்ச நாளாக நான் கண்டுகொண்டேன். ஆதியில் உன்னுடைய சம்மதம் பெற்றே கொண்டு வந்தேன் என்பதை நீ மறந்திருக்கமாட்டாய் என்று கருதுகிறேன். ஆனால் எனது உள்ளக் கிடக்கையும் உன்னை நான் இங்கு கொண்டுவந்த காரணத்தையும் அறிவித்தால் ஒருவேளை என்னை ஏளனமாகக்கூட நீ கருதலாம். பராசக்திக் கோவிலில் முதன்முதலாக உன்னை பார்த்ததும் காதல்கொண்டேன். அது பொழுது நீ என்னைப் பார்க்கவில்லை. என்காதல் ஒரு தலையானது என்பதையும் அறிந்துகொண்டேன். என்ன செய்யலாம். என்னால் சகிக்கமுடியவில்லை. உடனேயே தூதுமூலம் வீரகுணவர்ம மகாராஜாவிடம் விஷயத்தை அறிவித்தேன். அவர் அதற்கு இசையவில்லையென்பதோடு என்னை பலவாறு பரிகாசமாகவும் பதில்எழுதி அனுப்பிவிட்டார். பின் உன்னை சந்தித்து பேசலாமென்றிருந்தேன்; அதற்குள் உன்னை இன்னொருவனுக்கு விவாஹம் செய்து கொடுக்கவும் நிச்சயிக்கப்பட்டது என்ற செய்தி கிடைத்தது. அதனாலேயே இவ்விதமாக நடந்துகொண்டேன். என்மீது குற்றமிருந்தால் மன்னித்துவிடு"

இவ்வார்த்தைகளைக் கேட்ட திலகவதியின் மனமானது ககனத்தில் வட்டமிட்டுப் பறக்கும் கருடனைப் போல சஞ்சரித்தது. கண்கள் நிலத்தைக் கீறிக்கொண்டு பாய்ந்தன. பிறந்த பொன்னாட்டை பெரும்போரிலிருந்து தப்புவிக்க வேண்டுமென்ற ஒரே நோக்கத்துடன் இதங்கரும் இல்லறவாழ்வை தூவெனநீத்து சோழ சக்கிரவர்த்தியின் வேண்டுகோளுக் கிணங்கி தஞ்சாவூரையடைந்த ராஜகுமாரிக்கு அந்தரங்கத்தில் சக்கிரவர்த்தியிடம் அணுவளவேனும் சிநேகமில்லை. சொந்த நாட்டிலிருந்து புறப்படுகையில் "சோழநாட்டுக்குப் போவோம். சக்கிரவர்த்தியின் முன்பாகவே அவனுடைய கேவல நடவடிக்கைகளை எடுத்துச் சொல்வோம். அப்பொழுது ஆத்திரங்கொண்டு பலாத்காரம் செய்ய முயலுவான். கடாரியை அவன் மார்பில் செலுத்தி தானும் இறக்கவேண்டும். இதுதான் தமிழ் மகளுக்கு சுயமானத்தையும் சுதந்திரத்தையும் காப்பாற்றுவதற்கான மார்க்கம்" என்று உறுதி கொண்டிருந்தாள். தன்பொருட்டு மாத்ருபூமியை ரத்தக்களரியாக்கவும் தாய் தந்தையர்களையும் பந்துக்களையும் நிரபராதிகளான குடிஜனங்களையும் அனியாயமாகப் பலிகொடுக்கவும் அவள்மனம் இசையவில்லை. தனது இல்லற சுகத்தை—வெறும் காமநுகர்ச்சியை—பலி கொடுத்துவிட்டால் ஒரு மகாயுத்தம்—பதினாயிரக் கணக்கான மக்களின் ஜீவன்கள் காப்பாற்றப்படுவதென்றால் எவ்வளவு மகத்தானது என்ற உயர்ந்த எண்ணமே சக்கிரவர்த்தியின் கட்டளைக்கு அவளைப் பணியச் செய்தது. ஆனால் சக்கிரவர்த்தியின் மரியாதையான நடவடிக்கைகள், பச்சாத்தாப உணர்ச்சி, கருணை நிறைந்த பேச்சு, முதலிய அருங்குணங்கள் திலகவதியின் உள்ளத்தில் மாற்றத்தை யுண்டுபண்ணி விட்டன. அன்பை அன்பினாலல்லவா ஜெயிக்க முடியும்? தனது தப்பிதத்தையுணர்ந்து பச்சாத்தாபம்கொள்வதைவிட தண்டனை வேறு என்ன யிருக்கிறது? உத்தமர்களும், உயர்ந்த வீரர்களும், மகாத்மாக்களும் விரும்புவதும் மயங்குவதும் பச்சாத்தாபம் கொள்கிறான் என்று அறிந்தவுடன் அல்லவா? சோழ சக்கரவர்த்தியின் வார்த்தைகளுக்கு திலகவதி எவ்வித பதிலும் சொல்லவில்லை. வெகுநேரமாகக் காத்துநின்று பார்த்தான். பதில் இல்லை. தலைகுனிந்த வண்ணமாகவே தாங்கமுடியாத விசனத்துடன் திரும்பிப் போனான் மருதங்கசோழன்.

## IV

பெருந்தேவியென்பவள் சோழ சக்கிரவர்த்தியின் மனைவி: சோழசாம்ராஜ்யத்தின் மகாராணி. மகாஉத்தமி; பதிபக்தியும் ஈசுவரபக்தியுமுடையவள். மறந்தும் பிறவுயிர்களுக்கு கேடு செய்யமாட்டாள். நாட்டுமக்கள் எல்லோரும் மகாராணியைத் தங்கள் மாதாவாகவே கருதிவந்தார்கள். தனது கணவன் திலகவதியை அழைத்து வந்ததும், அவளிடம் அடங்கா ஆசைகொண்டிருக்கிறார் என்பதும் பெருந்தேவியாருக்குத் தெரியாததல்ல. இதைப்பற்றிச்சக்கிரவர்த்தியிடம் ஒரு வார்த்தைகூட பேசியது கிடையாது. திலகவதியின் சம்மதம் பெற்றே சக்கிரவர்த்தி அழைத்துவந்திருக்கிறாரென்றே அவ்வுத்தமி நம்பியிருக்கிறாள். அதனால் எந்தவிதமான துவேஷ எண்ணமும் அவளுக்குக் கிடையாது. ஒருதினம் திலகவதியைச் சந்திக்கவேண்டுமென்ற ஆசையுடன் அங்கு சென்றாள். மகாராணியைக் கண்டதும் திலகவதி வணக்கம் செலுத்தினாள். பின்னர் இருவர்களிடையே இவ்வாறு சம்பாஷணை நடைபெற்றது.

மகாராணி: குமாரீ, நீ ஏன் கவலையோடு காணப்படுகிறாய். உனக்கு என்னகுறை நேர்ந்தது. என்னாலியன்ற உதவியை செய்கிறேன்.

திலகவதி: மகாராணி, எனக்கு மன நிம்மதியென்பதே இங்குவந்த நாள்முதல் இல்லை. என்னுடைய இதயமானது என்னிடமில்லை. இது வெறும் எலும்புக்கூடு. பிரேமையால் வெறிபிடித்த எனது இதயத்திற்கு சாந்தி கிடைக்கவேண்டுமானால் பிரேமையொன்றினாலேயே முடியும். சாதாரணமாக எனக்கு எவரிடமும் பேசுவதற்கு மனமில்லை; ஆனால் தங்களைக்கண்டதும் பேசவேண்டுமென எனது அந்தராத்மா கட்டளையிட்டது. ஆகவே விதிப்படி நடப்பது நடக்கட்டும். என்மீது தங்களுக்கிருக்கும் அன்புக்கு சிரம்தாழ்த்தி வணங்குகிறேன். இவ்வேழையால் வேறு என்ன செய்ய முடியும்.?

மகாராணி: குமாரீ, உனது மனம் மஹாராஜாவிடம்தானே செலுத்தப்பட்டது. அதைப்பற்றி எனக்கு கொஞ்சமேனும் கவலையில்லை. உன்னை நான் மனப்பூர்வமாக சகோதரியாக ஏற்றுக்கொள்கிறேன்.

திலகவதி: சோழ சக்கிரவர்த்தியிடமா? என் மனமார இல்லை. இல்லவேயில்லை. நான் துளபநாட்டுராஜகுமாரனிடம் பிரேமை கொண்டவள். எனக்கு உயிர்ப்பிச்சையளித்த அவ்வுத்தமரையல்லாமல் பிறபுருஷனிடம் என் மனம் நாடுமா? நாங்களிருவரும் முதலாவதாகச் சந்தித்தவுடனேயே எங்கள் இதயங்கள் கலந்துவிட்டன். ஆண்டவன் சன்னதியில் எங்கள் கல்யாணம் நடைபெற்றுவிட்டது. பின்னர் வெளியார் அறியும்படியாக ஏற்படுத்தப்பட்ட மாங்கல்யதாரணவேளையில் உங்கள் புருஷர் பெருத்த சைன்னியத்துடன் தோன்றினர். என்கதி இந்த ஜென்மத்தில் இப்படியானது.

மகாராணியாரின் மனம் திகிலடைந்தது. திலகவதியின் வார்த்தைகளைப்பற்றி பலவிதமாக யோசித்தாள். பின்னர் இவ்வாறு கேட்டாள் "அப்படியானால் உன்னுடைய சம்மதமில்லாமலா சக்கிரவர்த்தி பலாத்காரமாக உன்னை தூக்கிக்கொண்டு வந்தார்"?

திலகவதி: இல்லை; என்னுடைய பரிபூர்ண சம்மதத்தின்பேரிலேயே நான் இங்கு கொண்டுவரப்பட்டேன்.

(11 ம்-பக்கம் பார்க்க)





# காரைக்குடி நகரசபை

## மே மாதம் 20-உக்குள் கட்டிட வேலை முடித்தல்வேண்டும்

(நமது நிருபர்)

காரைக்குடி நகரசபையின் சாதாரணக் கூட்டமொன்று தலைவர் ஸ்ரீ ராய. சொக்கலிங்கன் தலைமையில் 12—4—40உ மாலை 5 மணிக்கு நடைபெற்றது. தலைவர் உட்பட 11 அங்கத்தினர்கள் விஜயம் செய்திருந்தனர்.

அனுதாபம்

சென்னை அரசாங்க மராமத்து இலாகா மந்திரியாகவிருந்த அரிய தேசபக்தர் ஜனாப் யாகூப் ஹாசன் சேட் மரணத்திற்கும், உலக உத்தமர்களுள் ஒருவரும் இந்தியாவின் அரிய நண்பருமான தீனபந்து ஆண்ட்ரூஸின் மரணத்திற்கும் இக்கவுன்சில் வருந்துவதோடு தனது அனுதாபத்தை அன்னார் குடும்பத்தார்க்குத் தெரிவித்துக் கொள்கிறது என்ற தீர்மானத்தை தலைவர் ஸ்ரீ ராய. சொக்கலிங்கன் எழுந்து நின்று பிரேரிபிக்க வந்திருந்த மற்ற அங்கத்தினர்களும் மற்றும் அங்கு விஜயம் செய்திருந்தோரனைவரும் எழுந்து நின்று ஆமோதித்தார்கள்.

12-வது வார்டில் பள்ளிக்கூடம்

12வது வார்டில் ஒரு பள்ளிக்கூடம் ஸ்தாபித்தல் விஷயமாக தலைவரின் புரோபசல் ஒப்புக்கொள்ளப்பட்டது.

நர்ஸரி பள்ளிக்கூடம்

செவிட்டு ஊமைப் பள்ளிக்கூடம் முனிசிபல் ஆபீஸ் கட்டிடத்திற்கு மேல்புறம் கட்டப்போவதால் நர்ஸரி பள்ளிக்கூடத்தை ஆபீஸ் கட்டிடத்தின் கீழ்புறம் உள்ள இடத்தில் கட்ட ஒப்புக்கொள்ளப்பட்டது.

3-வது வார்டில் பள்ளிக்கூடம்

3வது வார்டில் புதிய முனிசிபல் பள்ளிக்கூடம் திறக்கப்போகும் சம்பந்தமாக மஹர்நோம்புப் பொட்டல் எய்டெட் ஸ்கூல் மானேஜரின் கோரிக்கையை ஏற்றுக்கொண்டு விரைவில் பள்ளிக்கூடம் திறக்க அனுமதி தரும்படி ஜில்லாக் கல்வி அதிகாரியைக் கேட்டுக்கொள்ளுகிறது.

கே. எம். ஸி. லைட்

முனிசிபல் ஆபீஸ் கட்டிடத்தில் 2 அடியில் கே. எம். ஸி. எழுத்துக்களால் எலெக்டிரிக் லைட் சப்ளைசெய்ய ஸ்ரீ மு. சிவ. மெ. வினைதீர்த்தான் செட்டியாரால் அளிக்கப்பட்ட நன்கொடை ரூபாய் 250 வந்தனத்துடன் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

ஆபீஸ் திறப்புவிழா ஒத்திவைப்பு

புது முனிசிபல் ஆபீஸ் கட்டிட வேலை முடிக்க இரண்டுமாத டயம் கோரியும் 21-6-40உ திறப்புவிழா வைத்துக்கொள்ளலாமென்றும் கண்ட்ருக்டர் எஸ். எம். காதர் மொஹைதீன் ருவுத்தரின் லெட்டர் படிக்கப்பட்டு, மே மாதம் 20உக்குள் கட்டிட்வேலை முழுமையும் முடித்துவிட வேண்டுமென்ற நிபந்தனையுடன் மே 20உ வரை அனுமதிக்கப்பட்டது.

சுகாதாரச் சட்டத்தின்கீழ் இது வரை எத்தனை கேசுகள் போடப்பட்டன என்பதற்கு 52 கேசுகள் போடப்பட்டன என்றும், அவைகள் எங்கெங்கே விசாரணை நடத்தப்பட்டன என்பதற்கு திருப்பத்தூர், பட்டமங்கலம், சிங்கம்புணரி, குன்றக்குடி, காரைக்குடி என்றும், அதற்காக முனிசிப்பல் சிப்பந்திகள் பிரயாணப்படிச்செலவு எவ்வளவுதொகை ஆகியிருக்கிறது என்பதற்கு ரூபாய் 18-6-0 என்றும் பதில் அளிக்கப்பட்டது.

38-39, 39-40 ஆகிய வருஷங்களில் நகரசபையார் செய்திருக்கும் வேலைகளில் பாக்கியிருக்கும் வேலைகளும் அவைகள் முடியாமலிருப்பதற்குக் காரணமென்ன என்பதற்கு, முனிசிபல்ஆபீஸ் கட்டிடம் முடியாமலிருப்பதினால் அதற்கான வேலைநடந்துகொண்டிருப்பதாலும், நல்லயன் ஆசாரி தெரு மெட்டல் செய்தல், ராமசாமிச் செட்டியார் தெரு மெட்டல்செய்தல், முத்துப்பட்டணம் முத்துராமன் செட்டியார் தெரு மெட்டல் செய்தல், குஞ்சான் செட்டியார் பாலத்தில் காரைக்குடி கண்மாய்சானல் கல்வர்ட், மெட்டல் சேகரிக்கத் தாமதமேற்பட்டதால் மேற்கண்ட வேலைகள்தாமதமாகிவிட்டன என்றும் இப்போது வேலை ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது என்றும் முசாபரிபங்களாவிற்குத் தண்ணீர்க் குழாய்கள் சப்ளைசெய்தல் பைப்புசாமான்கள் இன்னும் சப்ளைசெயப் படாததால் மறுபடியும்கொட்டேஷன் கேட்கப்பட்டிருக்கிறது என்றும், கக்கூசுகள் வேலை நடந்துகொண்டிருக்கிறது என்றும், ஹரிஜன் காலனியில் கிணறு வெட்டுதல், கண்ட்ருக்டர் ராஜாராம் அண் கோவினால் வேலைதாமதப்பட்டது என்றும் அதற்குத்தகுந்த நடபடிக்கை எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது என்றும், நாகநாதபுரம் மயானத்திற்கு முன்னேற்றம் செய்தல், வேலை சீக்கிரம்முடிய ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது என்றும் காரணங்கள் கூறப்பட்டன.

மழையினால் விழுந்த காம்பவுண்டு சுவர்களில் பழுதான கொஞ்சபாகங்களை மட்டும் திரும்பக்கட்டுவதற்கு புதிதாக பிளான் லைசென்ஸ்பீஸ் கேட்கப்படுகிறதா என்ற கேள்விக்குப் பதிலளிக்கையில் டி.மு. ஆக்ட் 197,199-வது செக்ஷன்படி பப்ளிக் ரோடுகளை அடுத்த காம்பவுண்டு சுவர்கள் கட்டுவதானாலும் பிளானும் லைசென்ஸ் பீஸ் கேட்கப்படுகின்றன என்றும், புதிதாகக்கட்டும் கட்டிடங்களில் பிளஷவுட்டும், செப்டிக்டாங்கும் வைக்கக்கூடாதென்று மறுப்பது வாஸ்தவமா என்ற கேள்விக்கு கட்டிடவிதிகளின் 10,1ன் படி கட்டாயப்படுத்தப் படுகிறதென்றும், புதிதாகக் கட்டும்வீடுகளில் மின்சார வசிதிகள் அமைக்கும்படி கட்டாயப்படுத்துவது வாஸ்தவமா என்ற கேள்விக்கு இல்லை என்றும் பதில்கள் கொடுக்கப்பட்டன.

சுகாதாரச் சட்டத்தின்கீழ் போடும் கேசுகள் திருப்பத்தூர் மாஜிஸ்திரேட் அவர்கள் காம்ப்செய்யும் ஊர்களில் விசாரணை நடத்துவதால், முனிசிபல் சிப்பந்திகள் அடிக்கடி போய்வரும் செலவு அதிகமாக ஏற்படுவதுடன் பொதுஜனக்களுக்கும் அதிக சிரமம் ஏற்படுகிறது. காரைக்குடி முனிசிபாலிடி சம்பந்தமான கேசுகளை மாஜிஸ்திரேட்அவர்கள் காரைக்குடியில் முகாம் செய்யும்போது விசாரணை நடத்தும் படியாக திருப்பத்தூர் மாஜிஸ்திரேட் அவர்களைக் கேட்டுக்கொள்ளப்படுகிறது என்ற திரு அபிசீனியா நாச்சியப்பா தீர்மானம் கவுன்ஸிலர் ஸ்ரீ. சொ. நாராயணன் அவர்களால் ஆமோதிக்கப்பட்டு ஏகமனதாக நிறைவேறியது.

சென்னை தமாஷ் வரி சட்டத்தின் கீழ் வரி வசூலுக்காக நகரசபையாருக்கு கவர்ன்மென்டார் கொடுக்கும் 10% கமிஷன் ரொம்பவும் குறைவாக இருக்கிறது. இந்த வரியில் டிரஷரி இல்லாததினால், ஸினிமாத் தியேட்டர்கள், டிராமாத் தியேட்டர்களிலிருந்து தமாஷ்வரியை முனிசிபல் ஆபீசிலேயே செலுத்தி வருதலினாலும் ஆபீஸில் அதிக வேலையும் மற்றும் அப்போதைக்கப்போது இந்த கலெக்ஷன் தொகைகளை திருப்பத்தூர் டிரஷரிக்கு அனுப்ப வேண்டியதிருப்பதினாலும் பிரயாணபடிச் செலவு வகையரு ஏற்படுகிறது. டிரஷரி இல்லாத முனிசிபாலிடிகளுக்கு 25% கமிஷன் கொடுக்கவேணுமாய் இந் நகர சபையார் சென்னை அரசாங்கத்தாரைக் கேட்டுக் கொள்கிறது என்ற மேற்படியார் தீர்மானம் கவுன்ஸிலர் ஸ்ரீ சொ. நாராயணன் அவர்களால் ஆமோதிக்கப்பட்டு ஏக மனதாக நிறைவேறியது.

—

## மகாத்மா ஒரு அவதாரம்

### ராஜாஜி பிரசங்கம்

ஸ்ரீ. ராஜாஜி காஞ்சியில் செய்தபிரசங்கத்தின் சாரம்:

சுயராஜ்யம் நமக்கு நிச்சயமாக கிடைக்கும். உலகநெருக்கடியானது இந்தியாவை பாதிக்கும். ராவணன், இரணியன்போன்ற அரக்கர் ஐரோப்பாவில் இப்போது நிறைந்திருக்கின்றனர். உலகம்பூராவும் கொண்டாடும் அவதார புருஷர் நம்நாட்டிலிருக்கிறார். அவருடன் சண்டைபோடுபவர்களுமிருக்கின்றார்கள். ராமனுடனும் கிருஷ்ணனுடனும் அக்காலத்தில் உறவினர்களே சண்டைபோடவில்லையா? மகாத்மாவால்தான் நெருக்கடியைத் தீர்க்கமுடியும்.

நமது வீட்டில் பலநாட்களாக எலிகள் நெல்லைத்தின்று கொண்டிருக்கின்றன. இந்த எலிகளைப் பிடிக்க ஓர் பாம்பு வருகிறது. எலிகளைக் கடிக்க வருவதால் நாம் பாம்புடன் சிநேகம் வைக்கலாமா? நம்மையும் பிறகு கடிக்குமல்லவா? அதுபோல் ஜெர்மனியாரின் ஜயத்தைக் கண்டு சந்தோஷப்படவேண்டாம். அவர்கள்ஜயித்துவிட்டால் பிறகு நம்மையும் விழுங்கப் பார்ப்பார்கள். நம்மைப் பொறுத்தவரையில்எல்லோரும் நமது விரோதிகளே. இவர்களை ஜெயிக்க நாம்யோசிக்கவேண்டும்.

நாட்டைப் பிரிக்கும்கிளர்ச்சி காங்கிரஸ்மீது சில தனிப்பட்ட நபர்களுக்கு உள்ள துவேஷத்தால் கிளப்பப்பட்டிருக்கிறது. நமது தேசத்திற்கு விமோசனம் வேண்டுமானால் ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை வேண்டும். முஸ்லிம்கள் இப்போது கஷ்டப்படுவதற்கு காரணம் முன்னர் அவர்கள் தனித் தொகுதியைக் கோரியதேயாகும். பசுமாட்டின் கொம்புகளைப் பிடித்துக் கொண்டு விட மறுக்கிறார்கள் முஸ்லிம்கள். ஹிந்துக்கள் பால்கறப்பதைக் கண்டு தாங்களும் கறக்க ஆசைப்படுகிறார்கள். நாம் அவர்களுக்குப் பால் கொடுக்கிறோம் என்று கூறினாலும் கம்பாமல் மாட்டை இரண்டாக வெட்டச் சொல்கிறார்கள். நமது பசு ஓர் காமதேனு. நமக்கு இருப்பது ஒன்றே இந்தியா ஒரே ஜீவன். நாம் சுயராஜ்யம் பெறவேண்டுமானால் தியாகம் செய்யவேண்டும். இயற்கையிலிருந்து மின்சாரம் உண்டாக்கப்படுவதுபோல நம்மிடத்தில் இருக்கும் சக்தியை பயன்படுத்தவேண்டும்.

—

### டெலுக் கான்சன்

21-4-40 ஞாயிற்றுக்கிழமை, சித்திராபௌர்ணமியில் டெலுக்கான்சன் தனவைசியர்களால் இங்கு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ தண்டாயுதபாணிக்கு 'மஹேஸ்வரபூஜை' நடத்தப்பெறும். 22-4-40உ திங்கட்கிழமை வெள்ளிரத உத்சவம் சிறப்பாக நடைபெறும்.

—

# போராட்டம் ஆரம்பித்தால் முன் வைத்த காலை பின் எடுக்கக்கூடாது



சர்தார் படேல் ஆமதபாதில் சத்தியாகிரஹ பிரதிக்ஞையில் கையொப்பமிட்டவர்களிடம் கூறியவற்றின் சாரம்:—

போராட்டத்தை ஆரம்பிக்க மகாத்மா குறிப்பிட்ட நிபந்தனைகள் இம்மாத முடிவுக்குள் நிறைவேறிவிட்டாலும் அவர் ஒருவினாடியும் தயங்காமல் துவக்கிவிடுவார். இதில் சந்தேகமேயில்லை. கூர்ஜரத்தையே மகாத்மாவின் மனம் நாடிநிற்கிறது. இங்குள்ள நிலை மற்றவிடங்களைவிட பரிசுத்தமாக இருக்கிறது. இங்கு அபிப்பிராயபேதம் அவ்வளவாக இல்லை.

பெண்கள் சேரலாம்.

இந்த சத்தியாகிரகத்தில் பெண்மக்களும் கலந்துகொள்ளலாமாவென்று ஒரு ஸ்திரீ கேட்டதற்கு ஸர்தார்,



மகாத்மாவின் அஹிம்ஸாப் படையில் பெண்களுக்குத்தான் ஆண்களைவிட அதிக மதிப்பு என்று பதில்சொன்னார்.

மகாத்மாவின் நிலை.

மகாத்மா தன் சொந்தஹோதாவில் போராட்டத்தை ஆரம்பிப்பதானால் இன்றைக்கே ஆரம்பித்து விடுவார். ஆனால் அவர் நாட்டுக்காகவும் காங்கிரசுக்காகவும் பொறுப்பு வகிக்கவேண்டியிருக்கிறது. தற்சமயம் போராட்டத்தை ஆரம்பிக்க நாடு தயாராயில்லையென அவர் கருதுகிறார். ஏனெனில் பலாத்காரம் அதிகமாகத் தலைகாட்டுகிறது. 1930--32-ம் வருஷங்களில் முஸ்லீம்கள் இப்போது எதிர்ப்பதைப் போல எதிர்க்கவில்லை. ஆகவே மகாத்மா ஜாக்கிரதையுடன் நடக்க விரும்புகிறார். சிலர் கூறுவதுபோல் போராட்டம் வேண்டாமென அவர்சொல்லவேயில்லை. அந்நியநாட்டு நூல்களை படிக்கும் வாலிபர்கள் தாங்கள் ஒன்றும் செய்யாமலேமற்றவர்களை குறைகூறிக் கொண்டிருக்கிறார்கள். முன்னேறிச் செல்ல விரும்புகிறவர்களை மகாத்மா தடுப்பதில்லை. அவர்கள் இஷ்டப்படி நடக்க அனுமதிக்கத் தயங்கமாட்டார். அவர்கள் சரிவர நடந்தால் நானும் சரி மகாத்மாவும் சரி அவர்களைப் பின்பற்ற சித்தமாயிருக்கிறோம். ஆனால் 1919—ம் வருஷம் அடைந்த அனுபவத்தைப் பார்க்கையில் எங்களுக்கு சற்று சந்தேகமிருக்கிறது. அப்போது பலாத்காரம் ஆங்காங்கு தோன்றியதால் பொதுஜனங்கள் அடக்கப் பட்டார்கள். நாம் போராட்டத்தை ஆரம்பித்துவிட்டால் முன்வைத்த காலை பின்வைக்கலாகாது.




கிருஷ்ணாவில் வரப்போகும் 'இந்தியத் தாய்'ல் ஓர் காட்சி.

## காங்கிரஸ் காரியக்கமிட்டித் தீர்மானம்

### ஸ்திரீகளுக்கு தனி இலாகா

காங்கிரஸ் காரியக்கமிட்டி ஏப்ரல் 15-ந் தேதி வார்த்தாவில் கூடியது. 4½ மணி நேரம் கூட்டம் நடந்தது.

ஸ்திரீகளுக்கென தனி இலாகா ஏற்படுத்துவதென முடிவு செய்யப்பட்டது. இது அகில இந்திய காங்கிரஸ் காரியக்கமிட்டி காரியாலயத்திலேயே இருக்கும். காங்கிரஸ் தலைவரும் பொதுக் காரியதரிசியும் இதை மேற்பார்வை பார்த்துவருவார்கள். ஸ்திரீகளுக்கிடையே காங்கிரஸ் வேலை கட்டுப்பாடுடன் நடக்க இவ்விலாக்கா ஏற்பாடு செய்யும்.

அடுத்த மே மாதம் 5-ந் தேதிக்குள் மாகாணக் கமிட்டிகள், தேர்தல் விசாரணைக் கமிட்டிகளை நியமித்து விடவேண்டும். அதற்குள் நியமிக்காவிட்டால் காரியக்கமிட்டி ஒரு விசாரணை போர்டை நியமித்துவிடும் என்று ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. பிறகு ராஜ்ய நிலைமையைப்பற்றி பொதுவாக விவாதம் நடைபெற்றது. சத்யாகிரஹக் கமிட்டிகள் நியமன சம்பந்தமாகவும் மற்ற நிர்மாணவேலை சம்பந்தமாகவும் மாகாணக் கமிட்டிகள் செய்துள்ள ஏற்பாடுகளைப் பற்றிய ரிப்போர்டு காரியதரிசி சமர்ப்பித்தார். காங்கிரஸ்காரர்களுக்கிடையே இப்போது அபிப்பிராய பேதமில்லையென்றும் கமிட்டிகளிடமிருந்து வந்த ரிப்போர்ட் திருப்திகரமாக விருப்பதாகவும் காரியதரிசி கூறினார். அங்கத்தினர்கள் அவரவர்கள் மாகாணத்தில் உள்ள நிலைமையை எடுத்துச் சொன்னார்கள். மகாத்மா எல்லாவற்றையும் சிரத்தையுடன் கேட்டார். அவர் மவுனவிரதம் அநுஷ்டிப்பதால் ஒன்றுமே பேசவில்லை.

அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டமொன்றை ஜூன் கடைசி வாரத்திலோ ஜூலை முதல் வாரத்திலோ நடத்த உத்தேசித்திருப்பதாகத் தெரிகிறது. முஸ்லீம் லீக் தீர்மானத்தைப்பற்றி காரியக்கமிட்டி உத்தியோக முறையில் எவ்வித கவனமும் செலுத்தாது. தனியாக ஒரு ராஜ்யம் வேண்டுமெனக் கேட்பவருடன் சமரஸம் பேசுவதற்கு இடமில்லையென ஒரு தலைவர் கூறினார்.

முக்கியமாக இப்போது கவனிக்க வேண்டிய வேலை மாகாணக் காங்கிரஸ் கமிட்டிகளைச் சத்யாகிரகக் கமிட்டிகளாக மாற்றுவதே. காங்கிரஸ் அங்கத்தினர்களாகவுள்ள சுமார் 30 லக்ஷம் பேர்களில் எத்தனைபேர் சத்யாகிரக உணர்ச்சி யுடையவர்கள் என்று இப்போது தெரிந்துவிடும். காந்திஜி அவசிய மேற்பட்டால் உயிரையும் கொடுக்கத் தயாராயிருப்பவர்களே சத்யாகிரகப் பிரதிக்ஞையில் கையொப்பம் செய்யவேண்டுமெனக் குறிப்பிட்டிருக்கிறார். இப்போது காங்கிரஸ் அங்கத்தினர்களிடமிருந்து கையொப்பம் வாங்கப்பட்டு வருகிறது. கூட்டத்துக்கு அழைக்கப்பட்டவர்களில் ஆசார்ய நரேந்திர தேவ் தவிர மற்றவர்கள் வந்திருந்தார்கள்.

அரசியல் நிலைமை சம்பந்தமாக வார்தாவில் காரியக்கமிட்டி ஒரு தீர்மானமும் நிறைவேற்றாது என்றே கருதப்படுகிறது.

"ராம்கார் சங்கநாதத்துக்குப் பிறகு தேசம் எவ்வாறு நடந்துகொண்டிருக்கிறதென்பதை மதிப்பிடும் அந்தரங்கமான மந்திராலோசனைகளை நடத்துவதே இப்போது காரியக்கமிட்டி நடத்தும் வேலையென ஒரு தலைவர் சொன்னார்

"அக்டோபர் மாதமே ஒத்துழையாமை ஆரம்பமாய்விட்டது. பிறகு படிப்படியாக அதைத் தீவிரப்படுத்தியுளோம். சந்தர்ப்பங்கள் பக்குவமானவுடன் போர்முறையில் காரியங்கள் நடக்கவேண்டியதே" என்று ஒருதலைவர் கூறினார்.

இந்திய சமஸ்தானங்களிலிருந்து தெரிந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளைப் பற்றி ஏதாவது ஆக்ஷேபம் வந்தால் அதை விசாரிப்பதற்குப் பண்டித ஜவஹர், படேல், புலபாய்தேசாய், ஆசார்ய கிருபாளினி, ஆகியவர்கள் அடங்கிய ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது.

—







## செய்தித் திரட்டு

சத்யாகிரகம் ஏற்பட்டால்?

சத்யாக்கிரகப் போராட்டம் ஆரம்பிக்கப்பட்டால் நாட்டில் எதிர்பாராத விடங்களிலிருந்தெல்லாம் அழிவுச் சக்திகளும் விரோதக் கோஷ்டிகளும் ஏற்பட்டு குழப்பமேற்படுமென்றும், தேசிய ராணுவமில்லாமல் சத்யாகிரகத்திலிறங்கக்கூடாதென்றும், அவசரப்பட்டு எதுவும் செய்யப்படவேண்டாமென காங்கிரஸைக் கேட்டுக் கொள்வதாகவும் ஸ்ரீ ஆனே கூறினார்.

சத்தியமூர்த்தியின் அறிக்கை

ஜெட்லெண்டு பிரபு ஒன்றுமேயறியாதவர்போல நடிக்கிறார் என்றும், அதனால் எவருமே ஏமாற்றமடையமாட்டார்களென்றும், வகுப்புத் தனித்தொகுதி என்னும் விஷத்தை வீசி நாட்டைப் பிரித்துவிட்டதாகத் தாம் பிரிட்டிஷாரை கண்டிப்பதாகவும் தெரிந்துதான் செய்துவருகிறார்களென்றும், இதற்காக பிரிட்டிஷார் வெட்கமடைய வேண்டுமென்றும் தமது அறிக்கையில் ஸ்ரீ சத்தியமூர்த்தி குறிப்பிட்டிருக்கிறார்.

'காக்ஸார் தலைவர் ஜெர்மன் ஏஜெண்டு'

லாகூரில் மார்ச் 19-ந்தேதி காக்ஸார்கள்மீது போலீசார் துப்பாக்கிப் பிரயோகம் செய்தது சம்பந்தமான விசாரணைக் கமிட்டியில் போலீஸ் அதிகாரி இந்திய காக்ஸார் இயக்கத்தின் தலைவர் ஜெர்மனியின் ஏஜெண்டு எனத் தாம் கேள்விப்பட்டதாகவும் ஆனால் அதை நம்பவில்லையென்றும் கூறினார்.

ஒரு நாளில் லட்சம் கஜம் நூல்

இவ்வருஷம் காந்தி சேவா சங்க மகாநாடு நடந்த மாலிகண்டா என்னும் கிராமத் தேசியவாரக்கொண்டாட்டத்தில் 24 மணி நேரத்திற்குள் கிராமவாசிகள் சேர்ந்து ஒரு லக்ஷம் கஜம் கதர் நூல் கைராட்டையில் நூற்றிருக்கிறார்கள்.

உத்தியோகங்களில் வகுப்புத்தீர்ப்பு

சர்க்கார் உத்தியோகங்களில் 100-க்கு 60 வீதம் முஸ்லீம்களையும் 40 வீதம் ஹிந்துக்களையும் நியமிப்பதென சிந்து தேசிய மந்திரி சபை நிர்ணயித்திருக்கிறது.

கோயம்புத்தூரில் ஹோம்ரூல் லீக்

கோவையில் ஒரு ஹோம் ரூல் லீக்கை ஆரம்பிப்பதாகச்சிலர் நிச்சயித்துள்ளார்கள். இந்தியாவுக்குப் பூர்ண குடியேற்ற நாட்டந்தஸ்துப் பெறுவதே இதன் முக்கிய நோக்கமாகும். இக்கழகத்தை சென்னையிலுள்ள புதிய லீக்குடன் இணைப்பதெனத் தீர்மானிக்கப்பட்டது. இதன் தலைவர் திவான்பகதூர் ஸி. வி. வெங்கடரமண அய்யங்கார் ஆவார்.

தேசீயக்கொடிமீது பாய்ச்சல்

டொராடூன் முனிசிபல் கட்டிடம், மைதானம், வாட்டர்ஒர்க்ஸ் கட்டிடம் இவற்றின் மீது பறந்துகொண்டிருந்த காங்கிரஸ் கொடிகள் முனிசிபல் நிர்வாக உத்திரவுக்கிணங்க அப்புறப் படுத்தப்பட்டன.

விவசாயப் பொருள்களுக்கு செஸ்

விவசாயப் பொருள்களுக்குச் செஸ்விதிக்கிறது; அதனால் கிடைக்கும் பணத்தைக்கொண்டு விவசாய ஆராய்ச்சிச் சபைக்கு உதவ இந்தியா சட்ட சபையில் முடிவுசெய்யப்பட்டது. இதற்கு 19 லக்ஷம் ரூபாய் பிடிக்குமென ஆராய்ச்சி சபைத் திட்டம் தெரிவிக்கிறது. செஸ் மூலம் 15 லக்ஷம்கிடைக்குமென்று சொல்லப்படுகிறது.

காந்திஜி மகாயுத்த மத்தியஸ்தர்

மகாயுத்த சம்பந்தமான காரியங்களில் மத்தியஸ்தம் மகாத்மாவுக்கு செய்ய பூர்ண அதிகாரம் அளிக்கப்பட வேண்டுமென கீதா சர்வகலாசாலைத் தலைவர் அறிக்கை வெளியிட்டிருக்கிறார். மகாத்மாதான் உலகிலேயே சிறந்த பாரமார்த்திகத் தலைவர் என்றும் பாரபட்சமின்றி தீர்ப்புக் கூறுபவரென்றும், சத்தியசீலர் என்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

சப் இன்ஸ்பெக்டருக்கு சிறைவாசம்

கராச்சியில் போலீஸ் சப்இன்ஸ்பெக்டர் ஒருவர் லஞ்சம் வாங்கியதாகக் குற்றம் சாட்டப்பட்டு நகர மாஜிஸ்திரேட்டு ஆறுமாத சிறைவாசத் தண்டனை விதித்தார். குற்றம் செய்தோரைச் சிறைக்கு அனுப்புபவர் இப்போது சிறையில் அடைக்கப்பட்டார்.

பூனை, நாயின் இயற்கையுணவு

வட இந்தியாவிலுள்ள டோல்பூர் என்னுமிடத்தில் ஒருவரின் நாய் பக்கத்து வீட்டுப் பூனையை ஹிம்சித்ததைக் கண்ட வீட்டுக்காரர் அதைக் காப்பாற்ற முயற்சித்தார். அவருடைய கையை நாய் கடித்து விட்டது. நாயின் சொந்தக்காரர்மீது வழக்குத் தொடர்ந்தார். பூனை நாயின் இயற்கையான உணவு என்றும், ஆகவே மனுதாரரை நாய் கடித்தது சரிதானென்றும் நீதிமன்றத்தில் தீர்மானிக்கப்பட்டது.

டாக்டரிடம் ஓடாதே

எடுத்ததற்கெல்லாம் டாக்டரிடம் ஓடக்கூடாதென்றும் இயற்கைதான் சிறந்த நிவாரணியென்றும் டாக்டர்கள் துணையை நாடாமல் வாழக் கற்றுக்கொள்ளவேண்டுமென்றும் விஷத்தைவிட கொய்னா அதிக விஷமுடையதென்றும் பாபு புருஷோத்தம் தாஸ் தாண்டன் சமீபத்தில் ஒரு பிரசங்கத்தில் வற்புறுத்தினர்.

—

### காங்கிரஸ் மாளிகை நிதி

சென்னைக் காங்கிரஸ் மாளிகை நிதிக்கு "தமிழ் நேசன்" நிர்வாக ஆசிரியர் மூலம் மலேயா இந்தியர்கள் ரூ. 4000 அனுப்பியிருக்கிறார்கள். இது வரையில் மலேயாவிலிருந்து மொத்தம் 15,000 ரூபாய் கிடைத்திருக்கிறது.

### பர்மாவில் ஸ்திரீகள் கைது

சட்ட விரோதமான ஸ்தாபனத்தைச் சேர்ந்தவர்களென்ற குற்றம் சாட்டிப் போலீசாரால் ஏப்ரல் 15-ந் தேதி ரங்கூனுக்குப்பக்கத்தில் மியாங்மியா என்னுமிடத்தில் 19 ஸ்திரீகள் உட்பட 'பர்மா பர்மியருக்கே சொந்தம்' என்ற கட்சியைச் சார்ந்த 33 பேர்கள் கைது செய்யப்பட்டார்கள். குடியானவர்களின் வேலையில் இவர்கள் தலையிட்டதாகக் கூறப்படுகிறது.

### கோயிலூர்

12-4-40ல் ராஜாஜி சதுக்கத்தில் மாலை 6 மணிக்கு திரு மு. சின்னையா தலைமையில் தேசியவாரக் கொண்டாட்டம் நடைபெற்றது. திரு. சு. சினிவாசன் கதர், தீண்டாமை, நூல் நூற்றல் என்பது பற்றிப் பேசினர். தீனபந்து ஆண்ரூஸின் மரணத்துக்கு இக்கூட்டம் அனுதாபம் தெரிவிப்பதாகவும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

# ஊழியன்

பொங்குபுகழ்ப் பாரதத்தாய் பொருந்தமணி முடிபுனைந்து புலவர் போற்றச்
சிங்கஅணை மீதிருந்து தனியரசு செலுத்தியுயர் செங்கோல் தாங்கி
எங்குமொளி வீசஅறம் யாவுநனி வளர்ந்தோங்க இடொன் றில்லா
எங்கள்தமிழ் இனியநறும் மணம்மலர ஊழியமே ஏற்றிட் டேனுல்

விக்கிரம-ஹு சித்திரை-மீ 6உ (18—4—40) வியாழன்

## நார்வேயில் கடும்போர்

ஐரோப்பாவில் போர் தொடங்கிப் பல மாதங்கள் ஆகிவிட்டன. முதலில் போர்க்களமாக்கப்பட்டது போலந்து. அதனைத் தொடர்ந்து ஜெர்மனியில் மேற்கு எல்லையில் அதாவது பிரான்சின் கிழக்கு எல்லையில் களங் காணப்பட்டது. அதன்பின் பின்லந்து ரணக்களமாக்கப்பட்டது. இன்று நார்வே ரத்தக்களமாக விளங்குகிறது. போலந்தில் துவக்கப்பட்ட போர் ஒரு வகையாக முடிந்துவிட்டது. இன்று ஐரோப்பிய படத்தில் போலந்து என்று ஒன்றைக் காணமுடியாது. போலந்து இனிமேல் உண்டாகவேண்டிய நிலைமையிலேயே இருக்கிறது. போலந்து ரஷ்யாவாலும் ஜெர்மனியாலும் பங்கு போடப்பட்டுவிட்டது. பின்லந்தை ஒருவகையாக அடக்கி ஒடுக்கி முடித்துவிட்டது ரஷ்யா.

வடகடல் ஓரத்தில் ஒட்டிக்கொண்டிருந்த சிறிய 'டென்மார்க்' நாட்டை ஜெர்மனி ஒரேநாளில் போர் இன்றியே பணியவைத்து பக்கத்தேயுள்ள நார்வேமீது பாய்ந்தது. ஜெர்மன்—பிரான்ஸ் எல்லையில் நீண்டநாட்களாக நடந்துவருவதாகச் சொல்லப்படும் போர் தவிர இன்று அதிர்ந்து பொரும் போர் அறிகுறிகள் காணப்படுவது நார்வேயிலேயே. நார்வே ஒரு சின்னநாடு. பலங்கொண்ட ஜெர்மனியை எதிர்த்து நிற்க நார்வேயால் ஆகாதென்பது நிச்சயம். ஆனல் இன்று நார்வேயின் நிலையென்ன? போர்நடக்கும் இடந்தான் நார்வேயேதவிரப் போரிடுவோர் யார்? ஒருபக்கம் ஜெர்மனி. இன்னொரு பக்கம் கிரேட் பிரிட்டன். ஜெர்மனி தனது வாலைப் பிரிட்டினிடம் நீட்டினல் அது என்ன ஆகும்!

"நார்வே'க்கும் 'இங்கிலாந்து'க்கும் நடுவே ஒரு சிறு கடல் மட்டுமே இருக்கிறது. அக்கடலுக்கு வடகடல் என்று பெயர். வடகடலின் மேல்கரையில் இங்கிலாந்து இருக்கிறது. வடகடலின் கீழ்கரையில் கொஞ்சம் வடக்காக நார்வே இருக்கிறது. இங்கிலாந்து நார்வேக்குள் புகுவதற்கு அச் சிறுகடல் ஒன்றுதான் கடக்கவேண்டுவது. எனினும் எளிதில் இங்கிலாந்து நார்வேக்குள் நுழையமுடியாதபடி ஜெர்மனி செய்திருந்த அரணைக்கடந்து பிரிட்டிஷ் துருப்புகள் நார்வேக்குள் நுழைந்துவிட்டன. மற்றைச் சிறுநாடுகளைப் பிடித்ததுபோல் நார்வேயைப் பிடிக்க நினைக்கக்கருதிய ஜெர்மனியின் ஆசையில் மண்விழுந்தது மட்டுமின்றி நார்வேக்களம் புகுந்த ஜெர்மனியருக்கு இனிப் போக்கிடம் எமனுலகாகவே இருக்க முடியும்.

அதுமட்டுமல்ல; நார்வேயிலுள்ள ஜெர்மன் படைகளைத் தொலைத்து, இடையிலுள்ள சிறு கடற் குட்டையைத் தாவி டென்மார்க்கின் மீது பாய்ந்து அங்குள்ள ஜெர்மன் அதிகாரத்தை வீழ்த்தி சாட்சாத் ஜெர்மன் தேசத்துக்குள் நுழைவதற்குப் பிரிட்டனுக்கு இப்போது வசதி வாய்த்துவிட்டது. தங்களுக்கு அனுகூலமான இந்த நிலைமையைப் பிரிட்டிஷ் ராஜ தந்திரிகள் எதிர்பார்த்தேயிருப்பர். போரின் நிலை சீக்பிரிட் அரணில் ஆமை நகர்வது போல் இருக்குமானல் முடிவுக்கு நெடுங்காலம் காத்திருத்தல் வேண்டும். அதுவரைப் போரின் பெயரால் விலை வாசிகள் முதலிய கஷ்ட நஷ்டங்களினின்றும் மக்கள் தப்பவும் வழியில்லை.

இந்தவாரந்தான் போர்ச்செய்தி மும்மரமாகக் காணப்படுகிறது. வடகடலில் கடற்போர் பலமாக நடந்திருக்கிறது. அதில் ஜெர்மனிக்குப் பலத்த கப்பற் சேதம் என்று தெரிகிறது. போலந்தைப் பிரிட்டனும் பிரான்சும் ஏன் காக்க முடியவில்லை? அங்குபோக வழியின்மையாலேயே. இடையேயிருந்த சிறுநாடுகளெல்லாம் நடுநிலைமை வகித்துவிட்டன. நடுநிலைமை நாடுகளூடு மேலே பறந்துகூடப்போவது முறைத்தவறு எனக் கொள்ளப்படுகிறது. இன்றைய நிலைமை வேருகிவிட்டது. இடைத் தேசங்கள் பெரும்பாலும் ஒருவகையாகிவிட்டன. நேருக்கு நேராகச் சிங்கமும் புலியும் மோத இடமுண்டாகிவிட்டது. இனித்தான் நார்வே வழியாக மிகக் கடும்போர் நடக்கும்.

## இடி முழக்கம்

### எல்லோரும் எதிர்பார்க்கும் எம்மான்

இன்றுவாழ் இந்தியர் எல்லோரும் மகாத்மா காந்தியின் திருவாயிலிருந்து எழும் கட்டளையை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனர். தேசத்தின் முழுப்பார்வையும் காங்கிரஸ் காரியக் கமிட்டி நடைபெறும் வார்தாவிலேயே செலுத்தப்பட்டுள்ளது. தலைவர்கள் வார்தாவில் ஏப்ரல் 15ந் தேதி தொட்டு மந்திராலோசனையிலாழ்ந்திருக்கின்றனர். அன்று மவுனவிரதமாதலால் அடிகள் வாய்திறந்து அருளவில்லை. எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருந்தார். நியாயவாதிகளின் வாதப் பிரதிவாதங்களை நீதிபதி கேட்டுத் தீர்ப்புத்தானே அளிக்க வேண்டும். அடிகள் ஆணைக்கு மறுவார்த்தையுண்டா? ஆனல் காரியக் கமிட்டியில் வாதப்பிரதி வாதங்களுக்கு இடமே யில்லை. அஹிம்ஸாப்போர் ஆரம்பிக்கப் படவேண்டுமென்றும் தீர்மானித்தாய் விட்டது. தளகர்த்தரும் தேர்ந்தெடுக்கப்பட்டார். அடிகள்தான் தளகர்த்தர். இந்தியாவில் ஆரம்பிக்கப்படும் இந்தப் போர் சரித்திரப் பெருமை வாய்ந்ததாகவும் கடுமையாகவும் இருக்குமென்பதில் எட்டுணையும் ஆட்சேபனையில்லை. பாரதமாதாவின் தலையெழுத்து இப்போரில் அடங்கியிருக்கிறது. உலகிலேயே பெருத்த நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது. ஐரோப்பாவில் யுத்ததேவதையின் தாண்டவம் பயங்கரமாகவும் கோரமாகவும் ஆரம்பித்துவிட்டது. ஹிட்லர் இந்தப் போரில் சகல அக்கிரமங்களும் அழிவுகளும் செய்ய அணுவளவும் தயங்கமாட்டார். ஜப்பான் ரகசியமாக யுத்தக் கப்பல்களைத் தயாரித்துவருகின்றது. மதில்மேல் பூனையாகிய முஸோலினி வெளிப்படையாக நடுநிலைமை வகிப்பதாகக் காட்டிக்கொண்ட போதிலும் அந்தரங்கமாக ஹிட்லரின் ராக்ஷஸ வெறிக்கு உடந்தையாயிருக்கிறார். மனிதவர்க்கத்துக்கே கேடானகாலம். ஐரோப்பாவில் சிறு நாடுகளின் கதியைப்பற்றி நிர்ணயிப்பதற்கில்லை. முடிமன்னரின் மணி முடிகள் அங்கு ஆட்டத்திலேயே இருக்கின்றன. இன்றிருந்த மன்னர் நாளை ஆண்டியாக மாறலாம். பிரிட்டனும் நெருக்கடியான நிலைமையிலேயே இருக்கிறது.

இவ்வித நிலைமைகளையெல்லாம் நன்கு கவனித்தே தீர்க்கதரிசியான மகாத்மா கவனமாகவும் ஜாக்கிரதையாகவும் இந்தியாவில் அஹிம்ஸாப் போரை ஆரம்பிப்பதற்குத் திட்டம் போடுகிறார். சில அவசரவாதிகள் ஆத்திரப்படுவது நேர்மையன்று. மகாத்மாவைத் தலைவராகக்கொண்ட இந்த யுத்தத்தில் பெண்களுக்குப் பிரத்யேக இடமளிக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. சக்தியின் அம்சங்களை நீக்குவது நியாயமல்லவென்று தலைவர்களுக்குத் தெரியும்.

நம் நாட்டில் கத்தியின்றி, ரத்தம் சிந்தாமல், பீரங்கிகளின்றி பெரும் போர் நடைபெறப்போகிறது. அஹிம்ஸாவீரர் வழிகாட்டுவார். தன்னுயிரையும் விடத்தயாராயிருப்பவர்களே இப்போரில் கலந்துகொள்ளல்வேண்டும் என்பது கட்டளை. நாட்டில் பலாத்காரம் இம்மியளவும் தலைகாட்டக் கூடாது.என்பதுதளகர்த்தரின்கண்டிப்பான உத்திரவு. எம்மான் காந்திஜியின் திருவாயிலிருந்துதீர்ப்பை எல்லோரும் எதிர் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். மகாத்மாவின் நா அசைந்தால் நாடு அசையும்.

### பிடிவாதத்திற்கு என் செய்வது?

"வாதத்திற்கு மருந்து உண்டு. ஆனல் பிடிவாதத்திற்கு மருந்து இல்லை" என்பது நாம் நாட்டில் வழங்கும் ஒரு பழமொழி. ஜின்னு போன்றாரின் நடவடிக்கைகளாலேயே இப்பழமொழி ஏற்பட்டிருக்கலாம். அல்லது இப்பழமொழிக்கு இலக்காக ஜின்னு போன்றார் தோன்றியிருக்கிறார்களோ என்ற எண்ணமும் சில வேளை நமக்கு ஏற்படுவதுண்டு. அற்ப விஷயங்களுக்குப் பிடிவாதம் காட்டுவதே அனர்த்தமானதாகும். அந்த நிலைமையில் பிறந்த பொன்னுட்டின் விடுதலை விஷயத்திலா பிடிவாதமும் முட்டுக்கட்டையும் காட்டவேண்டும். அந்தோ! இந்திய அன்னையின் புதல்வன் இதயம், இதனுல் என்ன பாடுபடும்: மகாத்மா இம்மாதிரி வார்த்தைகளைக் கேட்டு ஆன்மாவே கொதித்தெழுகிறது என்று கூறுவதில் எத்துணை கொதிப்பு இருக்கிறது என்பதை யுணர்ந்துபார்க்கவேண்டியது நாட்டு மக்களின் இன்றியமையாத கடமையாகும்.

நாம் அனைவரும் இந்திய அன்னையின் மக்கள். தாய்க்கு மக்களிடம் வேற்றுமையிருக்காது. அன்னையின் அவதியை அகற்றாத புதல்வன் எப்பேர்ப்பட்ட வனயிருத்தல் வேண்டும்? ஒரு மகன் தடைசெய்வதென்றால் தெய்வம் பொறுக்கும் செயலாமோ? இன்று முஸ்லீம் லீக் இம்மாதிரியான முட்டுக்கட்டைகளைத் தொடர்ந்து செய்து கொண்டேயிருக்கிறது. முஸ்லீம் பெரியார் பலர் லீகின் தீர்மானத்தைக் கண்டிக்கிறார்கள்; இந்தியாவில் எங்கும் லீக் தீர்மானம் அக்கிரமமானது என்ற பேச்சு ஒலியும் எதிரொலியுமாகக் கேட்கிறது. ஆனல் ஸ்ரீ ஜின்னுவின் மூளைக்கு இது தென்படவில்லை. மேலும் மேலும் முஸ்லீம் ராஜ்யத்தை ஸ்தாபிக்கவேண்டு மென்கிறார். நாளைத்தினம் முஸ்லீம் லீக் தீர்மானத்தை ஆதரித்து நாடெங்கும் கூட்டங்கள் நடத்தவேண்டுமென்று ஜின்னு கட்டளையும் போட்டிருக்கிறார். காங்கிரஸ் மந்திரிகள் ராஜினமா செய்த தினத்தை விமோசன்தினம் என்று இவர்கள் கொண்டாடினார்கள். இம்முறையில் பெருந் தவறுகளை செய்வதில் முஸ்லீம் லீக் முனைந்து நிற்கிறது. இதனுல் இந்தியா துண்டாக்கப்படுவதொன்றுமே கிடையாது; என்றாலும் இம்மாதிரி சொல்வதற்கு நாட்டில் ஒரு சிறு கூட்டம் இருக்கிறதே என்பதுதான் வெட்கக்கேடு.

பிரித்தாளும் கொள்கையில் பேர் பெற்ற பிரிட்டனுக்கு இதனல் ஒரு பிடிப்புக் கிடைத்துவிட்டது. ஜெட்லெண்டு பிரபு ஹிந்து முஸ்லீம் ஒற்றுமை ஏற்பட வழி செய்யுங்கள் என்று சொல்வதற்கும் ஏது ஜின்னுவின் பிடிவாதம்தானே! தற்கொலைக்கொப்பான பைத்தியக்காரத் தினத்தைக் கொண்டாடுவதற்குக் கட்டளையிட்ட ஜின்னுவின் திருமூளையில் நற்புத்தி உதிக்கச்செய்ய வேண்டுவது ஆண்டவனின் வேலையேயாகும். கண்ணை மூடிக்கொண்டு கிணற்றில் விழுகிறவர்களை காப்பாற்றுவது ஈசுவரனின் கடமையேயாகும். இந்தியத்தாயின் கண்ணீர் ஈசுவரனை இளகச் செய்யுமென்பதே தேசத் தலைவர்களின் எண்ணமாகும்.



## குடியேற்ற நாட்டந்தஸ்தை உடனே வழங்குக

### 'மாஞ்செஸ்டர் கார்டியனி'ல் ஸர். ஹரிசிங் எழுதுகிறார்

லண்டனிலிருந்து வெளியாகும் "மாஞ்செஸ்டர் கார்டியன்" பத்திரிகையில் சர். ஹரிசிங் எழுதிய கட்டுரையில் குறிப்பிட்டிருப்பதாவது:-

சர்வகட்சி மகாநாட்டிற்குப் பின் வகுப்புத் தொகுதிகள் ஏற்பட்டதன் காரணமாகவே ஹிந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்குமிடையே பிளவுண்டாகியது. ஒவ்வொரு வகுப்பும் தான் சொல்வதுதான் சரியானதென்று வற்புறுத்துவதால் சமரசமெதுவும் சாத்தியமில்லை. பாரபட்சமற்ற மத்தியஸ்தம் மூலமாகவே பிரச்னையை நியாயமாகத் தீர்க்க முடியும். ஆனல் அரசியல் முன்னேற்றத்துக்கு இதை ஒரு நிபந்தனையாக விதிக்கக்கூடாது. இந்தியாவிலுள்ள 11 மாகாணங்களில் பெரிய மாகாணங்களாகிய பஞ்சாபும், வங்காளமும் (முஸ்லீம் மெஜாரிட்டியால் ஆளப்படுபவை) வெஸ்ட் மினிஸ்டர் சட்டப் பிரகாரமான குடியேற்ற நாட்டந்தஸ்தை ஆதரிப்பதாக ஒருமனதாக முடிவு செய்திருக்கின்றன. சமஸ்தானதிபதிகள், மைனரிட்டி, ராணுவம், ஐரோப்பிய நலன்கள் முதலியவை அப்பால் தீர்த்துக்கொள்ளும்படி விட்டுவிட்டால் மேற்படி குடியேற்ற நாட்டந்தஸ்தை காங்கிரஸ் அங்கீகரிக்கக் கூடும் - அதிகாரத்தில் பங்குகொள்ள முஸ்லீம்களுக்கு உரிமையுண்டு. ஆனல் இது தீரும்வரை நாட்டின் முன்னேற்றத்தை தடைசெய்ய அவர்களை விட்டுவிடக்கூடாது. முஸ்லீம் லீக்தான் முஸ்லீம்களின் ஏகப்பிரதிநிதி யென்பது உண்மையல்ல. ஷீயா முஸ்லீம்கள் கூட்டுத் தொகுதியை ஆதரிக்கிறார்கள், காங்கிரஸையும் ஆதரிக்கின்றனர். 100 க்கு 90 முஸ்லீம்களைக் கொண்ட எல்லைப்புற மாகாணம் காங்கிரஸை ஆதரிக்கிறது.

இந்தச் சமயத்தில் சமஸ்தானங்கள் உள்பட இந்தியாவிற்கு வெஸ்ட் மினிஸ்டர் சட்டப்பிரகாரமானகுடியேற்ற நாட்டந்தஸ்தை வழங்குவதாக பிரிட்டன் அறிவித்தால் எல்லா முக்கிய பிரச்னைகளும் தீர்ந்துவிடும்.

### வரப்பெற்றோம்

காரைக்குடி ராம் அண் மூர்த்தி அட்வர்டைஸிங் ஏஜன்ஸியாரால் அச்சிடப்பெற்ற விக்கிரமவருடப் பஞ்சாங்க விளம்பர மலர் சித்திரை 1உ கிடைக்கப்பெற்றோம். இதில் விக்கிரம வருடப் பஞ்சாங்கமும் பல விளம்பரங்களும் இருக்கின்றன;

காலண்டர்கள்

பி. எஸ். ஐஸ் கம்பெனியாரின் காலண்டரும் வரப்பெற்றோம் இக்காலண்டரில் இங்கிலீஷ்மாதம் நடுவிலும் அதற்குச் சரியான தமிழ் மாதங்கள் தலைப்பிலும், கீழும், இரண்டுகலர்களில் அழகாக அச்சிடப்பெற்றிருக்கிறது.

ஏ. எம். முத்து அண்கோ காலண்டர், பென்சில், சாம்பிள் புகையிலை பொட்டணம் முதலியனகிடைக்கப்பெற்றோம். இக்காலண்டரை ஒரே அட்டையில் மாதங்கள் ஆரம்பக் கிழமைகளைக் கணக்குச்செய்து அச்சிடப்பட்டிருக்கிறது.

கண்ணுக்குள்ளே யிருக்கும் அக உறுப்புகளைப் பரீட்சிக்க உதவும் முறையில் வாஷிங்டன் சர்வகலாசாலையைச் சேர்ந்த டாக்டர் ரான்மெல் ஹீல்டுரைத் என்பவர் ஓர் நூதன விளக்கைக் கண்டுபிடித்திருக்கிறார்.

## உள்ளூர் செய்திகள்

★

### பிரபல சங்கீதக் கச்சேரிகள்

21-4-40உ காலை 9 மணிக்கு ஸ்ரீ மெ. செ. மெ. மெ மெய்யப்ப செட்டியார் அவர்களின் குமாரத்தி சிவகாமிக்கு நடைபெறும் காப்புக்கட்டுப் புதுமையில் அடியிற்கண்ட சங்கீதக் கச்சேரிகள் நடைபெறும்.

21-4-40 காலை 9 மணிக்கு

திரு விழிமிழலை பிரதர்ஸ் –நாதஸ்வரம்

நீடாமங்கலம் ஸ்ரீ மீனுக்ஷி சுந்தரம் பிள்ளை—தவுல்.

மாலை 4 மணிக்கு

அரியக்குடி ஸ்ரீ ராமானுஜ அய்யங்கார்—பாட்டு.

கும்பகோணம் ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளை—பிடில்.

பாலக்காடு ஸ்ரீ மணி அய்யர்—மிருதங்கம்.

தேவகோட்டை ஸ்ரீ சுந்தரராஜ ஆய்யங்கார்—கிஞ்சிரா.

மன்னார்குடி ஸ்ரீ நடேசபிள்ளை மொர்சிங்.

22-4-40 மாலை 5 மணிக்கு

மைசூர் ஸ்ரீமதி எம். எஸ். திருபுராம்பாள்—பாட்டு.

சென்னை ஸ்ரீமதி டி. அபிராமி சுந்தரி பிடில்.

சென்னை ஸ்ரீமதி எஸ். பி. ஹம்ஸ தமயந்தி—மிருதங்கம்.

5-5-40ல் சொக்கலிங்கம் சுகாதார நிலையத்தில் கனம்தூக்கும் போட்டிப் பந்தயம் நடைபெறுமென்றும் இதில் கலந்து கொள்ளவிரும்பும் காரைக்குடி வாசிகள் 25-4-40க்குள் காரியதரிசிக்கு 4 அணு பிரவேசக்கட்டணம் அனுப்பிவைக்க வேண்டுமென்றும் வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசுகள் அளிக்கப்படுமென்றும் அறிவிக்கப்படுகிறது.

### நடன நாட்டியங்கள்

15—4—40உ ஸ்ரீ ஷண்முகவிலாஸ் எலக்டரிக் தியேட்டரில் கலாஅபிவிருத்தி சபையினரின் நடன நாட்டியங்கள் நடைபெற்றன. ஸ்ரீ எஸ். நடராஜ் நன்றாக அபிநயபாவங்களை எடுத்துக்காட்டினார். இவருடைய உடலமைப்பு நடன நாட்டியங்களுக்கு ஏற்றதாயிருக்கிறது. இந்தியரின் பூர்வீகக் கலையான நடன நாட்டியத்தை வெகு கவனமாகக் கையாளப்படல் வேண்டும். இதற்கு மிகுந்த திறமையும் பரிச்சயமும் வேண்டும். ஸ்ரீநடராஜனின்பாம்பாட்டி நடனம், வேடன் நட்டம் ஆகியவை மிகவும் நன்றாயிருந்தன. ஸ்ரீமதி பட்டம்மாளின் நாட்டியங்கள் பரவாயில்லையென்றுதான் சொல்ல வேண்டியிருக்கிறது. முன்னுக்கு வருவதற்கான அறிகுறிகள் இவளிடம் காணப்படுகின்றன. இவர்கள் தங்கள் நாட்டியங்களுக்கு தமிழ்ப் பாடல்களையே எடுத்துக்கொண்டது போற்றத்தக்கதாகும். இடை யிடையே தோன்றும் ஹிந்துஸ்தானி நடனத்தையும், பட்டம்மாளின் சிவ நடனத்தையும் நீக்கிவிடுவது நல்லது. இவைகள் ரொம்ப மட்டமானவை. பின்னணி சங்கீதம் சோபாவிலிருந்தவர்களுக்குக் கூட தெளிவாகக் கேட்கவில்லை, பாட்டின் கருத்துத் தெரிவது ரஸிகர்களுக்கு இன்றியமையாதவை யென்பதைக் கவனித்து நிர்வாகஸ்தர் சீர்திருத்தம் செய்யவேண்டும்.

### நகரமக்களுக்கு வேண்டுகோள்

1940 வருஷத்திற்குக் காங்கிரஸ் அங்கத்தினராகச் சேர்வதற்குரிய ரசீது புஸ்தகங்கள் வந்திருக்கின்றன. தேசத்தில் ஒரு நெருக்கடியான சமயம் இது. எந்த நெருக்கடியிலும் காங்கிரஸின் சக்திக்கு ஊறுநேராது என்பதைக் காட்டவேண்டிய முக்கியமான இந்தத் தருணத்தில் எல்லாக் காங்கிரஸ்காரர்களும் எழுந்து வேலை செய்து ஏராளமான காங்கிரஸ் அங்கத்தினர்களைச் சேர்க்க வேண்டுகிறேன். புதிதாக இவ்வருஷம் அங்கத்தினராகச் சேர்ப்பவர்களுக்கு தனிப்புத்தகமும், வருஷா வருஷம் வழக்கமாகச் சேர்ந்து வருபவர்களுக்கு பிரத்தியேகமான புத்தகமும் இருக்கின்றன. இம்மாதக் கடைசிக்குள் குறைந்தது ஆயிரம் அங்கத்தினர்களாவது சேர்த்துவிட வேண்டுமாதலால், நகரமக்களெல்லோரும் சுறுசுறுப்பாகத் தங்கள் பெயர்களைப் பதிவு செய்து கொள்ள வேண்டுகிறேனென்று நகர்க்கமிட்டி காரியதரிசி ஸ்ரீ வி. பரமசிவன் அறிவிக்கிறார்.

## விக்கிரம வருட வாழ்த்து

[சுவாமி சுத்தானந்த பாரதி]

ஓங்குக திருவருள் ஓம்சுத்த சக்தி!
ஓங்குக திவ்விய ஜீவனம் உலகில்.
நீங்குக பிணியிடர், நிருதரின் கொடுமை.
தாங்குக தருமமித் தாரணி நலனை!

சாதி மதஞ்செயுஞ் சண்டைகள் ஒழிக!
தீதறுஞ் சமரஸத் தீஞ்சுவை பொழிக!
காதலும் வீரமும் கற்புடன் பொலிக!
ஜோதிசுத் தான்ம சுதந்திரம் வளர்க!

உண்மையும் கருணையின் உள்ளமும் விரிக!
திண்மனத் தீரரின் சீர்த்திகள் பெருக!
புண்ணிய பாரதப் பூரணப் புலவர்
பண்ணிய தவக்கதிர் பாவனந் தருக!

துன்பங்கள் யாவையுந் தூருடன் பெயர்க!
இன்பங்கள் யாவையும் எழிலுடன் உயர்க!
நண்பர்கள் பொதுநலப் பண்புடன் வாழ்க!
அன்படி யார்களின் அருட்பணி வெல்க!

செங்கதிர் போலிளஞ் செந்தமிழ் பொலிக!
நங்கதி யாகிய நாயகன் அருள்க!
பொங்குக வான்சுகம்! புதுயுகம் வருக!
மங்களம் ஓங்குக! மன்னுயிர் வாழ்க!

### காங்கிரஸ் அபேக்ஷகர் வெற்றி

காரைக்குடி நகரசபை இரண்டாவது வார்டு உபதேர்தலில், 15-4-40ந் தேதி காங்கிரஸ் சார்பாக செக்காலை ஸ்ரீ வி. கிருஷ்ணப்பர் அபேட்சை மனுதாக்கல் செய்தார். வேறுயாரும் போட்டி மனுத்தாக்கல் செய்யாததால் போட்டியின்றிக் காங்கிரஸ் அபேக்ஷகர் வெற்றி பெற்றார்.

### கதர் விற்பனை

ஏப்ரல் 6உ முதல் 13உ வரை விற்பனை ரூ2918-12-9 சென்ற வருஷம் ஷை வாரத்தில் விற்பனை ரூ2476-9-9 என்று காரைக்குடி காதிவஸ்திராலயம் நிர்வாகஸ்தர் அறிவிக்கிறார்.

### ஒரு திருத்தம்

கம்பன் படம் மதிப்புரையில் காணப்படும் சென்னை நவயுகப்பிரசுராலயத்தின் வெளியீடு என்பதை மாற்றி காரைக்குடியில் கம்பன் விழாவைக் கொண்டாடியவர்களால் கம்பன் படம் வெளியிடப்பட்டது என்று படித்துக்கொள்ளவும்.

### பிரான்ஸை இத்தாலி மிரட்டுகிறது

வேர்ஸேல்ஸ் உடன்படிக்கை காலத்திலிருந்து பிரான்ஸ் இத்தாலிக்கு விரோதமான கொள்கையை அனுஷ்டித்து வருவதாகப் புகார் செய்து ஸீனர்காய்டா ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார்.

"இத்தாலியைவிட பிரான்ஸில் ஆள் பலம் குறைவு. அட்லாண்டிக்கிலும், மத்யதரைக் கடலிலும் பிரான்ஸுக்கு சுதந்திரம் இருக்கிறது. ஆனல், இத்தாலிக்கு மத்தியதரைக் கடல் ஒன்றுதான் ஜீவநாடியாயிருக்கிறது. மத்தியதரைக் கடலில் பிரான்ஸின் நிலைமையும் கொள்கையும் அவர்களுடைய தேசிய நலன்களுக்குமட்டுமல்லாமல் ஏகாதிபத்ய நலன்களுக்கும் பாதுகாப்பளிப்பதாயிருக்கிறது. இத்தாலி இந்த நலன்களை அங்கீகரிக்கிறது. ஆனல் இதர நாடுகளின் அடிப்படையான தேவைகளுக்கு முரணுக இருக்கும் ஒரு ஆதிக்கத்தை அவர்கள் ஏற்படுத்துவதற்கு இத்தாலி சம்மதிக்க முடியாது.

### ஒரு நிமிஷத்தில் 50 அடி ஆழம்

ஒரு நிமிஷத்தில் 50 அடி டிரென்ச் வெட்டும்படியான முறையில் ஓர் இயந்திரம் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. ஒரு அடி வீதியில் 50 அடி ஆழத்தில் இந்த டிரென்சுகள் வெட்டப்படும். இந்த இயந்திரத்தை பாஸ்வர்த் டிரென்சர் என்று சொல்லப்படுகிறது. பாஸ்வர்த் என்பவர்தான் இதை முதன் முதலில் கண்டுபிடித்தவர். இந்த இயந்திரத்தை ஒரு மனிதன் சுமந்து கொண்டு செல்லலாம். இதன் எடை 96 ராத்தல். 300 மனிதர்கள் செய்யும் வேலையை இந்த இயந்திரத்தினுல் செய்துவிட முடியுமாம்.

ஐரோப்பாவில் யுத்த தேவதை தலைவிரி கோலமாக தாண்டவமாடுகிறாள். ஹிட்லர் ஐரோப்பா பூராவையும் அடக்கி ஆளப் பேராசைப்படுகிறார்— பேராசை பெரும் நஷ்டத்தில்தான் கொண்டு சேர்க்கும். எந்தவிதமான அநீதிகளையும் கொலைகளையும் செய்யத் தொடங்கிவிட்டார். நேச நாடுகளுக்கும் நடுநிலைமை நாடுகளுக்கும் எவ்வித பாதுகாப்புமில்லை. யுத்த தர்மத்தைக் கவனிப்பதே ஹிட்லருக்குக் கிடையாது. திடீரென நார்வே, டென்மார்க்கு இருநாடுகள் மீதும் ஹிட்லர் பாய்ந்துவிட்டார். டென்மார்க்கு உடனேயே கீழடங்கிவிட்டது. இதனால் நாட்டில் யுத்தமில்லாமல் நிறுத்திவிட்டதாக டென்மார்க் அரசர் கருதலாம். நார்வே அப்படிச்செய்யவில்லை. எதிர்த்துப் போராடுகிறது. பிரிட்டனும் பிரான்சும் நார்வேக்குத் துணையாக யுத்தத்தில் கலந்துகொண்டன.

## நார்வே அரசருக்கு பிரிட்டிஷ் மன்னர் செய்தி

"ஜெர்மனி ஈவிரக்கமற்ற முறையில் முன்யோசனையுடன் தங்கள் தேசத்திற்குள் யுத்தத்தைப் பரப்பியபோது தங்களும் தங்களது குடிஜனங்களும் மிகக் கண்ணியமாகவும் தீரமாகவும் நடந்துகொண்டிருப்பதை நானும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைச் சார்ந்தவர்களும் பாராட்டுகிறோம். பிரஞ்சு—பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் நார்வேக்கு உதவிசெய்யத் தங்களால் இயன்ற முயற்சியை செய்துவருகின்றனர்"

> **யுத்தம்பற்றி ஜவஹர் கருத்து**
>
> ஸ்காண்டிநேவியாவை ஜெர்மனி கைபற்றியது ஏகாதிபத்யக் கொள்கையை அநுஷ்டிக்கவிரும்புவர்முன் பின் பாராது நடக்கக்கூடியவர்கள் என்பதை வற்புறுத்துகிறது. ஸ்காண்டிநேவிய நாடுகளுக்கு நமது அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளல் வேண்டும். பிரிட்டிஷ் ஏகாதிபத்யக் கொள்கை சம்பந்தமாக நாம் கொண்டுள்ள அபிப்பிராயம் மாறவில்லை. பிரிட்டன் உண்மையில் சுதந்திரம் அளிக்க விரும்பினால் அது ஏகாதிபத்யக் கொள்கையை விட்டொழித்து இந்தியாவுக்குச் சுயேச்சை வழங்கவேண்டும். மீசைக்கும் ஆசை கூழுக்கும் ஆசை சாத்தியமில்லை.

## கடும் போர்

நார்வேயிலுள்ள பிரிட்டிஷ் ஸ்தானீகர்களும் சிப்பந்திகளும் பயணமாய் விட்டனர். ஜெர்மன் விமானங்கள் நார்வே நகரங்களின்மீது குண்டுகளை வீசின. நார்வே துறைமுகத்தை ஏற்கனவே அங்கிருந்த ஜெர்மானியர் ஆக்ரமித்துக் கொண்டனராம். அவர்கள் பிரயாணிகள் அல்லது ஜெர்மன் வர்த்தகக் கப்பல்களைச் சேர்ந்த சிப்பந்திகள் என்ற ஹோதாவில் அங்கிருந்து வந்தனராம். 'பெர்கனை' பிரிட்டிஷ் துருப்புகள் கைப்பற்றிவிட்டதாகச் சொல்லப்பட்டசெய்தி ஜெர்மன் அதிகாரிகளால் மறுக்கப்படுகின்றது. கடற்

மகா யுத்தச் செய்திகள்

# ஐரோப்பாவில் யுத்த தேவதையின் கோரத் தாண்டவம்

## பிரிட்டன் தீவிரப்போரில் இறங்கிவிட்டது

### நார்வே—ஜெர்மென் கடும் சண்டை

★

போரில் ஜெர்மனிக்குப் பெருத்த நஷ்டம் மேற்பட்டதாகச் சொல்லப்படுகிறது. ஒரே நாளைக்குள் 40,000 டன் கப்பல்கள் மூழ்கடிக்கப்பட்டன என்று சொல்லப்படுகிறது.

## கடலில் பிரேதங்கள்

ஸ்வீடனில் தென்கடற்கரைக்கு எதிரில் நடந்த கடற்போரினால் பல சவங்கள் சமுத்திரத்தில் மிதக்கின்றன. ஜெர்மன் அறிக்கையிலிருந்தே இரு ஜெர்மன் குரூய்ஸர்கள் மூழ்கடிக்கப்பட்டதாகத் தெரிகிறது. இரு பிட்ரிஷ் நாசகாரிகளும் நாசமாயின. கடற்போரினால் ஜலத்திலிருந்து 3000 ஜெர்மன் பிரேதங்களை நார்வே கடற்கரைரோந்துப் படகுகள் பொறுக்கியெடுத்தனவென்று சொல்லப்படுகிறது. நார்வேத் துறைமுகங்களிலுள்ள ஜெர்மன் துருப்புகளின் நிலைமை அபாயகரமாயிருப்பதாக பாரிஸ் செய்தி அறிவிக்கிறது.

## கடற்படைப் பலம்

யுத்த ஆரம்பத்தில் ஜெர்மனி எட்டு குரூய்ஸர்களைப் பெற்றிருந்தது, என்றும் இவற்றில் 5 நாசமாக்கப்பட்டனவென்றும் 4 குரூய்ஸர்கள் கட்டப்படுகின்றனவென்றும் பிரிட்டன் 60 குரூய்ஸர்களையும் பிரான்ஸ் 20 குரூய்ஸர்களையும் பெற்றிருக்கின்றனவென்றும் லண்டன் செய்தி கூறுகிறது.

## நார்விக்கை பிரிட்டிஷ் துருப்புகள் கைப்பற்றின

நார்வேயில் பலவிடங்களில் பிரிட்டிஷ் துருப்புகள் இறங்கியிருப்பதாக பிரிட்டிஷ் கடற்படை இலாகா, யுத்த மந்திரி இலாகா இரண்டும் சேர்ந்து விடுத்திருக்கும் கூட்டறிக்கையில் ஜெர்மானியர் மலைக்கு விரட்டப்பட்டார்களென்றும் பெரிய வெடிகுண்டுகளுக்குப் பிறகு பிரிட்டிஷார் அங்கு இறங்கினார்களென்றும் நார்வேகாரர்கள் ஜெர்மன் துருப்புகளைக் கடுமையாகச் சுட்டனர் என்றும் சொல்லப்படுகிறது. நார்வேக்கு எதிரிலுள்ள லாபோடன் தீவுகளிலும் பிரிட்டிஷ் துருப்புகள் இறங்கியதாகப் பத்திரிகைச் செய்தியொன்று கூறுகிறது. ஜெர்மன் துருப்புகள் கைப்பற்றியுள்ள பிரதேசங்களில் ஒரு பிரிட்டிஷ் சோல்ஜராவது காலடி எடுத்துவைக்கவில்லையென ஜெர்மன் செய்தி கூறுகிறது.

இந்த யுத்தத்தில் பிரிட்டனுக்கு மொத்தம் 66700 டன்கள் எடையுள்ள பல கப்பல்கள் நஷ்டமாயிருக்கின்றன. நார்வே யுத்தத்திற்கு முன்பு ஜெர்மனிக்கு 64 கப்பல்கள் நஷ்டமாயிருந்தன. இப்போது மொத்தத்தில் 92 கப்பல்கள் 370000 டன்கள் நஷ்டமாயிருக்கவேண்டும். பிரிட்டனுக்கு 4 நாசகாரிகள் நஷ்டம்.

## நார்வேயின் பலத்த எதிர்ப்பு

நார்வேயில் தந்தி—டெலிபோன்களும் போக்குவரத்துச் சாதனங்களும் வெட்டப்பட்டு வருகின்றன. அங்கு பதினைந்து வயது பையன்கள் முதற்கொண்டு படைகளில் சேர்க்கப்படுவதிலிருந்து நார்வேக்காரர் ஜெர்மனியின் படையெடுப்பை எவ்வளவு தூரம் பிரயத்தனம் செய்கிறார்களென்று தெரியவருகிறது. நார்வே அரசரைப் பிடிக்கும்படி ஜெர்மானியர்களுக்கு உத்தரவிடப்பட்டதென்றும் அம்முயற்சி பலிக்கவில்லை யென்றும் சொல்லப்படுகிறது. நார்வே வெளிநாட்டு மந்திரி "சண்டை ஆரம்பித்துவிட்டது. நாம் இதுவரை தற்காலிகமாக இழந்த இடங்களைக் திரும்பப் பெறத் தீர்மானித்திருக்கிறோம். அதுவரை நார்வே பொதுமக்கள் சர்க்காரால் ஆதரிக்கப்படுவர்" என்று அறிக்கை வெளியிட்டிருக்கிறார்.

## தோல்வி ஏற்படுமானால்?

நார்வேயில் நடக்கும் சண்டையின் முடிவு, மிக முக்கியமாகப் பொறுப்பு வாய்ந்த ஜெர்மன் வட்டாரங்களில் கருதப்படுகிறதென்றும் நார்வேயில் மேற்கொள்ளப்பட்டிருக்கும் யுத்தத்தில் தோல்வி ஏற்படுமானால், இராணுவ நிபுணர்கள் யோசனை சொல்ல விரும்பமுடியாத ஒரு நிலைமையும் முடிவும் ஏற்படக்கூடுமென்று ஸ்டாக்ஹோமில் பிரசுரமாகும் 'டைட் நின்ஜன்' என்னும் பத்திரிகையில் பெர்லின் நிருபர் எழுதியுள்ளார்.

"வெற்றிபெறுவதற்காக நாம் சிறிது காலம் காத்திருக்கவேண்டியிருந்தாலும் இறுதியில் வெற்றி நமக்கே என்பது உறுதி. பிரிட்டிஷ் மக்கள் ஒரு காரியத்தில் ஒரு தடவை இறங்கிவிட்டால் அதை எளிதில் அதன் போக்குப்படி விட்டுவிடமாட்டார்கள்" என்று பிரிட்டிஷ் பிரதம மந்திரி மிஸ்டர் சேம்பர்லேன் கூறினார்.

## இத்தாலி—ஜெர்மன் நட்பு

ஜெர்மன் சர்க்கார் ஏஜென்ஸி தெரிவிப்பதாவது: ரோமில் உள்ள ஜெர்மன் ராஜதந்திரிகளது தொகை அதிகப்படுத்தப்பட்டிருக்கிறது. இது இத்தாலி ஜெர்மன் சர்க்காருக்குள் தீவிர ஒத்துழைப்பு இருந்து வருகிறதற்குப் புதுச் சின்னமாகும். பாஸிஸ்டு இதாலி ஜெர்மனியின் அந்நிய சம்பந்தங்களில் பெற்றிருக்கும் விசேஷ முக்கியம் வெளிப்படுகிறது. இத்தாலி-ஜப்பான் நட்பை நம்பியிருக்கமுடியுமென்று ஹிட்லர் கூறுகிறார்.

## பிரிட்டிஷ் நகரங்கள்மீது குண்டு வீசப்படும்

"ஹாண்டல்ஸ் பிளாட்" என்ற பத்திரிகையின் பெர்லின் நிருபர் கூறுவதாவது:—

சில பிரிட்டிஷ் நகரங்கள் மீது குண்டு வீசப்படுமாயின் யாரும் ஆச்சரியமடையவேண்டியதில்லை. நேச நாடுகளில் ஈவு இரக்கமின்றி கொடிய முறையில் செயல் புரிந்துவருவதாக பிரசாரம் நடந்துவருகிறது. நார்விக் கத் துறைமுகத்தில் ஜெர்மன் மாலுமிகள் திக்கற்ற நிலைமையில் நீந்தி உயிர் தப்ப முயலுகையில் பிரிட்டிஷ் யுத்தக் கப்பல்கள் அவர்கள் மீது பீரங்கிப் பிரயோகம் செய்ததாக ஜெர்மன் பத்திரிகைகள் ஆர்ப்பாட்டமாகச்செய்திகள் பிரசுரித்திருக்கின்றன. ஜெர்மானியரிடை ஆத்திரமூட்டுவதுதான் இதன் நோக்கம்.

> **யுத்தம்பற்றி ஸர். ஜாபருல்லா**
>
> இப்போது மேனாட்டில் நடந்துவரும் யுத்தத்தின் அரசியல் காரணங்கள் யாதாயினும் உலகில் விரிவாக கடவுளிடம் நம்பிக்கை அற்றுவருவதே அதன் பாரமார்த்திக காரணம். தற்போதைய நாகரீகத்தை நிச்சயமாக அழித்துவிடும். புது நாகரீகமும் புதுமுறையும் பிறக்கும். யுத்தம் கீழ்திசை நாடுகளுக்கும் இந்தியாவிற்கும்கூடப் பரவலாம். இது சமயம் ஆண்டவனிடம் நம்பிக்கை வைத்து வாழ்வது தான் கடமை. ஆண்டவன்தான் இந்த ஆபத்தான நிலைமையிலிருந்து காப்பாற்றவேண்டும். இதற்கு ஆண்டவனை பிரார்த்திப்பதே நாம் செய்யவேண்டிய கடமை.

## தமிழ்நாட்டில் 5 ஆயிரம் முஸ்லீம்கள் தயார்

சிதம்பரத்தில் நடைபெற்ற ஒரு பொதுக் கூட்டத்தில் ஸ்ரீ எஸ். ஏ. ரஹீம்சாயபு, ராஷ்டிரபதி மௌலானா அஸாத் தலைவராகயிருக்கும் இக்காலத்தில் முஸ்லீம்கள் ஏராளமாக காங்கிரஸில் சேரவேண்டுமென்றும் தமிழ்நாட்டிலுள்ள முஸ்லீம்களில் 5 ஆயிரம் பேர் சத்தியாகிரகத்தில் சேரத் தயார் என்றும் டில்லியிலுள்ள சுமால் மசூதியில் சுமார் 2 லக்ஷம் முஸ்லீம்கள் கூடுவதாகவும் அங்கே இன்னும் லீக் கூட்டம் போடமுடியவில்லையென்பதோடு காங்கிரஸ்கூட்டம் நடைபெறுகின்றனவென்றும் லீக் முஸ்லீம்களின் ஏகப்பிரதிநிதியல்லவென்றும் குறிப்பிட்டார்.

---

கா. முத்துப்பட்டணம்:— பொதுநல சங்கத்தின் சாதாரணக் கூட்டம் 19-4-40உ மாலை 4-மணிக்கு சங்கத்தலைவர் ஸ்ரீ சா. மு. விஸ்வநாதம் இல்லத்தில் நடைபெறும்.





## தமிழ்நாட்டுக் காங்கிரஸ் தலைவர் அறிக்கை

தலைவர் ஸ்ரீ. கே. காமராஜ் நாடார் கீழ்க்கண்ட வேண்டுகோளை விடுத்துள்ளார்:—

ஏப்ரல் 8-ந் தேதி நடந்த தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் இது சத்தியாகிரகக் கமிட்டியாக நியமிக்கப்பட்டுவிட்டது. இதேமாதிரி எல்லா காங்கிரஸ் கமிட்டிகளும் சத்யாகிரகக் கமிட்டிகளாகவேண்டும். சத்யாகிரகிகளை உடனே சேர்க்கவேண்டும். சத்தியாகிரகிகள் நடந்து கொள்ளவேண்டிய விதம் பற்றி 25—3—40 'ஹரிஜனி'ல் காந்திஜி எழுதியதைக் கைக்கொள்ளவேண்டும். சத்தியாகிரகிகள்இரும்புபோன்ற மனவலுவுடையவராக யிருத்தல் வேண்டும். சத்தியாகிரகிகளின் தொகையைப் பெருக்குவதற்காக அனுவசியமான முயற்சிகளெல்லாம் செய்யவேண்டியதில்லை. காந்திஜியால் போர்செய்ய கட்டளையிடப்படும்வரை இந்த சத்யாகிரகிகள் தீவிரமாக நிர்மாணத்திட்டங்களை நிறைவேற்றுவதில் ஈடுபடவேண்டும்.

## ஸ்ரீ வைத்திய நாதய்யர் காங்கிரஸிலிருந்து விலகினார்

மகாத்மா காந்தி ஸ்ரீமதி அமிருத கௌரி மூலம் ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியாருக்கு, சமீபத்தில் மதுரை ஜில்லாக் காங்கிரஸ் கமிட்டிக்கு ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஸ்ரீ வைத்தியநாதய்யரை காங்கிரஸ் வேலையினின்று விலகி, ஆலயப்பிரவேச இயக்கத்தை பூராவாகக் கவனிக்க வேண்டுமென்றும் அறிவித்திருக்கிறார். அதன்படி தலைவர் பதவியை ஸ்ரீ அய்யர் ராஜினாமா செய்துவிட்டார்.

## தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டி

தமிழ் நாடு காங்கிரஸ்கமிட்டிக் கூட்டம் மே மாதம் 11-12-ந் தேதிகளில் நடைபெறும். தீர்மானங்கள் மே 5-ந் தேதிக்குள் தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டி ஆபீசுக்கு அனுப்பப்படவேண்டுமென அறிவிக்கப்படுகிறது.

## வங்காளத்தில் தடையுத்தரவு

இந்தியத் தற்காப்புச்சட்டம் பொதுஜனப் பாதுகாப்பு, யுத்தத்தை திறமையாக நடத்துவது, சமூகத்திற்கு அத்யாவஸ்யமான சப்ளைகளும் ஸர்வீஸ்களும் நடப்பது இவற்றில் ஏதேனும் ஒன்றுக்காவது விரோதமாக நடக்க வேண்டுமென்ற எண்ணத்தாலோ அல்லது விரோதமாக முடியக்கூடிய காரியமாகவோ வங்க மாகாணத்தில் நடக்கும் ஊர்வலங்கள், பொதுக்கூட்டங்கள் ஆகியவற்றுக்கு தடை உத்தரவு ஏப்ரல் 21-ந் தேதிமுதல் 6 மாத காலம் சர்க்காரால் போடப்பட்டிருக்கிறது.

# உள்நாட்டுச் செய்திகள்

★

கோட்டையூர்: 12—4—40உ வெள்ளிக்கிழமை மாலை 6 மணிக்கு காங்கிரஸ் ஆபீஸிலிருந்து ஊர்வலம் புறப்பட்டு காந்தி சதுக்கை அடைந்ததும், 'ஹரிஜன்' ஸ்ரீ ஏ. ரெங்கண்ணா எம். எல். ஸி. தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. ஸ்ரீ ஆர். பத்மநாபன் பேசினார்.

எஸ் சொக்கனாதபுரம் 5—4—40 மாலை 5 மணிக்கு எஸ். சொக்கனாதபுரம் சர்க்கிள் காங்கிரஸ் கமிட்டியின் சார்பில், காந்தி சதுக்கத்தில் திரு. க. ஆ. சோமசுந்தரஞ் செட்டியார் தலைமையில் கூட்டம் நடைபெற்றது. திருவாளர்கள் பி. செல்லத்துரை பி. ஆர். ராமசாமி டி. ஆர். அருணசலம் தற்கால அரசியல் நிலைமை, காங்கிரஸ் திட்டங்கள் ஆகியவைகள் குறித்து பேசினார்கள். யாகூப் ஹாஸன் அகால மரணத்தைக் குறித்து இக்கூட்டம் அனுதாபப் படுவதாகத் தீர்மானம் ஏகமனதாக நிறைவேய்தியது.

24—3—40உ விவேகானந்த வாசகசாலையின் விசேஷக்கூட்டம் ஸ்ரீ க. ஆ. சோமசுந்தரஞ்செட்டியார் தலைமையில் கூடியது. ஸ்ரீமான்கள் க. ஆ. சுப்பையா செட்டியார், சி. சோம. கண்ணப்பா, லெ. சுப. லெட்சுமணன் ஆகியோர்முறையே தலைவர், உபதலைவர் காரியதரிசிகளாக நியமிக்கப்பெற்றனர்.

சதுர்வேதமங்கலம்: 10—11—1940 மாலை 4 மணிக்கு இவ்வூர் இளைஞர் சங்கத்தின் புதுவருட நிர்வாகிகள் தேர்தல் திரு. சுப. பழனிச்சாமி தலைமையில் நடைபெற்று நிர்வாகிகள் ஏகமனதாகத் தெரிந்தெடுக்கப் பட்டார்கள். தேர்தல் முடிந்தவுடன் இக்கமிட்டியின் சார்பாக தேசியவாரம் கொண்டாடப்பட்டது. சங்கக்காரியதரிசி ஸ்ரீ சே. கணேசன் இவ்வூர் இளைஞர் சங்கக்கட்டிடத்தில் "இளைஞர்களும் தேசியமும்" என்பதுபற்றி பேசினார்.

காரையார்கோவில்:— 6-4-40உ முதல் 13-4-40உ வரை தேசியவாரத்தை தேசிய சமதர்ம சங்கத்தின் ஆதரவில் கொண்டாடப்பட்டது. பிரதி தினமும், ஊர்வலமும் பொதுக் கூட்டமும் நடத்தி காங்கிரஸின் நிர்மாணத் திட்டங்களைப்பற்றிப் பிரசாரம் செய்யப்பட்டது.

10-4-40உ மாலை 6மணிக்குக் காங்கிரஸ் 4 அணா சந்தாதார்களின் கூட்டம் ஸ்ரீ ஆ. மெய்க்கோல் உடையார் தலைமையில் கூடி தற்காலமுள்ள கலைக்கப்படாத கிராமக் காங்கிரஸ் கமிட்டி சனாதனப்பற்றுள்ளதாயிருப்பதால் புதுக்கமிட்டி நிறுவுவதெனத் தீர்மானிக்கப்பட்டு புது நிர்வாகிகள் கொண்ட கமிட்டியும் அமைக்கப்பட்டது.

நேமத்தான்பட்டி:—திருநாவுக்கரசு வித்தியாசாலையின் பதினான்காவது ஆண்டு விழாவும், விசாலாட்சி சங்கத்தின் 4வது ஆண்டு விழாவும் 2-5-40 வியாழக்கிழமை காலை மாலை இருவேளைகளிலும் நடைபெறும். கோயம்புத்தூர் ஸி. கே. சுப்பிரமணிய முதலியார் பி. ஏ. தலைமை வகிப்பார். ஆர். பி. சேதுப்பிள்ளை பி. ஏ. பி. எல். சொற்பொழிவாற்றுவார். மாணவமாணவிகள் பாட்டு பேச்சு நடிப்புக்களும் நடைபெறும்.

கோயம்புத்தூர்: — பகவான் திரு. ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் ஜெயந்திவிழா 23-4-1940 தேதி அ. வைத்திய நாதய்யர் தலைமையில் கொண்டாடப்படுமென்றும் கிருஷ்ணமூர்த்தி பாகவதரின் ஹரிகதா காலக்ஷேபம், சுவாமி சித்பவானந்தாவின் உபந்நியாசமும் திருவீழிமிழலை சுப்ரமணியம் சகோதரர்கள் நாதசுவரக் கச்சேரியும் அன்னதானமும் நடைபெறுமென்றும், இவ்விழாவிற்குக் கோவையிலிருந்து வர காலையில் 7-40மணிக்கும், திரும்பிச்செல்ல இரவு 9-47மணிக்கும், ஸ்பெஷல் ரயில்கள் ஏற்பாடு செய்யப்பட்டிருப்பதாகவும் சங்கக் காரியதரிசி அறிவிக்கிறார்.

ராமனாதபுரம்:-இந்தஜில்லாப் பிரதேசங்களில் யுத்தத்துக்கு விரோதமாகப் பேசியதாக கொடுமுடி ராஜகோபாலன் இந்தியப் பாதுகாப்புச்சட்ட விதிகளின்படி கைது செய்யப்பட்டிருக்கிறார்.

அரியக்குடி:—கிராமக் காங்கிரஸ் சபையினரால் தேசியவாரம் கொண்டாடப் பெற்றது. 11-4-40ல், தக்ளி ஊர்வலத்துடன் தேசிய பஜனையும் சேரிகளில் பிரசாரமும் நடந்தது. பஜனையில் முத்துராம பாகவதர் ஹரிஜன கீதங்கள் பாடினார். 12-4-40ல் கே. மாணிக்கன், தலைமையில் நடந்த பொதுக்கூட்டத்தில் திரு என். எஸ். கணபதி, கே. கன்னையா, தேசியவாரத்தின் லக்ஷியத்தையும் காங்கிரசின் நிர்மாணத் திட்டங்களைப்பற்றியும் பேசினார்கள். கூட்டத்தில், "ஹரிஜனத்தொண்டு" என்ற புத்தகம் இலவசமாக வழங்கப்பட்டது.

இலட்சுமிபுரம்:—ஸ்ரீ மீனாட்சி சங்கத்தின் 14-வதாண்டு 12-வது மாதக்கூட்டம் 12-4-40உ மாலை 4மணிக்குச்சொக்கலிங்க வித்தியாசாலையில் நேமத்தான்பட்டி திருநாவுக்கரசு வித்தியாசாலை தலைமை ஆசிரியர் எஸ். தங்கவேல் தலைமையில் ஆரம்பமாயிற்று. மாணவ மாணவிகள் பாட்டு பேச்சு, நடிப்பு, தேவாரம், கும்மி கோலாட்டம் முதலியன நிகழ்த்தினர். ஒக்கூர் பாலரத்னம் 'மாணவர் கடமை' என்னும் பொருள்பற்றிப் பேசினார்.

தாணிச்சாவூரணி:- ஸ்ரீ ராமநவமி உத்ஸவத்தில் 16—4—40 செவ்வாய்க்கிழமை முதல் 20-ந்தேதி வரை சங்கீதக் கச்சேரிகள் நடைபெறும். கடைசிநாள் மாலை 4 மணிக்கு மஹாராஜபுரம் விஸ்வநாதய்யரின் வாய்ப்பாட்டு தக்க பக்கவாத்தியங்களுடன் நடைபெறும்.

தேவகோட்டை: 11—4—40உ வழக்கம் போல் மாதக்கடைசியில் கடையடைப்புச் செய்தார்கள். அதில் வர்த்தகச்சங்க மாஜி தலைவர் ஸ்ரீ வி. எம். வி. பாலுசாமி மூப்பனார் கடையைத் திறந்து வைத்திருந்தார். அதை வர்த்தகத் தொழிலாளர்கள் கடைமுன்பு நின்று மறியல் செய்தார்கள். போலீசார் சப்மாஜிஸ்டிரேட் ஸ்தலத்திற்கு வந்து தொண்டர்களை கலைந்துபோகும்படி செய்தார்கள். மாலையில் ஸ்ரீ ராம. அண்ணாமலை தலைமையில் ஓர் பொதுக் கூட்டம் நடைபெற்றது. அதில் ஸ்ரீ பாலுசாமி மூப்பனார் கடையைத் திறந்து வைத்திருந்ததற்காக கண்டித்து பல அன்பர்கள் பேசினார்கள்.

6—4—40ல் திரு. ஆர். கிருஷ்ணய்யங்கார் தலைமையில் சத்தியாக்கிரக தினம் கொண்டாடப்பட்டது. 8—4—40ல் திரு. ஏ. ரெங்கண்ணா தலைமையில் கதர் தினம் கொண்டாடப்பட்டது. 9—4—40ல் திரு. எம். ஜி. முகுந்தராஜய்யங்கார் தலைமையில் தக்ளிப் போட்டி நடைபெற்றது. அதில் திரு சங்கர சுப்ரமணியன் பரிசு பெற்றார். 9, 11—4—40உகளில் திரு எம். ஜி. முகுந்தராஜய்யங்கார், கமலா ஆகியவர்களின் முயற்சியினால் ரூ 400 பெறும்படியான கதர் தூக்கி விற்பனை செய்யப்பட்டது. 11—4—40ல் தக்ளி ஊர்வலம் நடைபெற்றது. அன்று திரு. எம். ஜி. எம். தலைமையில் ஹரிஜன தினம் கொண்டாடப்பட்டது. 13-4-40ல் கமலா தலைமையில் ஜாலியன்வாலாபாக் தினம் நடந்தது. ஸ்ரீ சிவசுப்ரமண்யம் திரு. எஸ். எல். பாரதி பேசினார்கள்.

திருவாளர்கள் டி. ஆர். அருணசலம், ராம. அண்ணாமலை, கரு. சொக்கலிங்கம், எஸ். மீராமுகைதீன் சித. திருநாவுக்கரசு ஆச்சாரி, எஸ். சந்திரமௌலி ஆகியோர் சொற்பொழிவுகளில் கலந்து கொண்டனர்.

குமாரவேலூர்:—15-4-40 மாலை 4-30 மணிக்கு தேவகோட்டை சர்க்கிள் திரு. எம். பிச்சையப்பா பிள்ளை தலைமையில் கூடி, கிராமப் பந்தாட்டக்கிளப், திறந்து வைத்து சொற்பொழி வாற்றினார்கள். பந்தாட்டக்கிளப்புக்கு, தலைவராக திரு. வெ. சோம சோமசுந்திரஞ் செட்டியாரையும் காரியதரிசியாக திரு. சேவு சோமசுந்தரஞ் செட்டியாரையும் பொக்கிஷதாராக திரு லெ சொக்கலிங்கத்தையும் கமிட்டி மெம்பர்களும் தெரிந்தெடுக்கப் பெற்றபின் கூட்டம் முடிந்தது.

## ஹிட்லரின் முடிவுகாலம்

### இலங்கை ஜோஸ்யர் கூற்று

இலங்கையைச்சேர்ந்த பிரபல ஜோஸ்யரான ஸ்ரீ. பூலாத் சிங்களா இலங்கைப் புதுவருஷ பலன்களை ரேடியோமூலம் அறிவிக்கையில் இவ்வருஷத்துடன் ஹிட்லரின் அதிகாரம் ஒடுங்கிவிடுமெனக் கூறினார். ஏப்ரல் 16-ந் தேதி குரு மேஷாராசிக்குப் போவது ஹிட்லர் முடிவுகாலத்தின் ஆரம்பமென்றும் அதே சமயத்தில் காலஞ்சென்ற ஜார்ஜ் மன்னரின் அபிமான புத்திரரான ஷயிபாடினாண்டு அரசராவரென்றும் அவர்தெரிவித்தார். இத்தாலிக்கு நன்மையும், அமெரிக்காவுக்கும் சுபிட்சமும், ஜப்பானுக்கு வெற்றியும் கிட்டுமெனச் சொன்னார். ஆனால் இந்தியா சம்பந்தப்பட்ட மட்டில் அதன் அரசியல் அபிலாஷைகள் விஷயத்தில் இவ்வருஷம் பெருத்த ஏமாற்றமே ஏற்படுமென அவர் கூறினார்.

## சர்க்கார் கல்வி மெம்பர் தேச ஒற்றுமைக்கு பாடுபட சொல்கிறார்

'அறிவை பரப்புவதுமட்டும் உங்கள் வேலையல்ல நீங்கள் வசித்துவரும் பிரதேசங்களில் வகுப்பு ஒற்றுமையை ஏற்படுத்தவும் கடமைப்பட்டிருக்கிறீர்கள்' என்று மத்திய சர்க்காரின் கல்வி மெம்பர் இந்தியா காடுகள் பயிற்சி சாலை முதல் பட்டமளிப்பு விழாவில் நிகழ்த்திய பிரசங்கத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

# கிள்ளான் சங்க நடவடிக்கை

## இன்னமும் தலைவர், காரியதரிசிகள் எழுதிப்படிக்கும் நிலைமையே

### 9-வது ஆண்டு நடவடிக்கைகள்

20—3—40௳ புதன்கிழமை ஐக்கிய மலாய்நாடு நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் வர்த்தக சங்கத்தின் 9-வது ஆண்டுநிறைவுவிழாப் பொதுக் கூட்டம் கூடியது.

ஸ்ரீ மு. மு. ராம நல்லகருப்பன் செட்டியார் தலைமையில் கூட்டம் ஆரம்பிக்கப்பட்டது. தலைவர் முன்னுரையில் குறிப்பிட்டதாவது:—

**சங்கம் தோன்றிய காலம்**

இம் மலேயாவிலே இதற்குமுன் பல சங்கங்கள் தோன்றி மறைந்தனவாயினும், முதன்முதலாக 1930—ம் வருடத்திலேயே இவ்வூரில் கிள்ளான் நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள் சங்கம் என்ற பெயரால் இவ்வூர் நகரத்தார்களால் காணப்பட்ட ஒரு சங்கமானது செய்த பலத்த கிளர்ச்சியின் பயனாகவும், சிறுசில ஏல விற்பனை தடைச் சட்டம் காரணமாகவும் நான்கு சமஸ்தானங்களிலுமுள்ள நமது சமூக மக்களனைவரும் விறிட்டெழுந்து கோலாலம்பூரில் ஒன்றுகூடி 1931—ம் ஆண்டில் செட்டியார்கள் வர்த்தக சங்கம் என்றபெயரால் தலைமைச் சங்கமும், அதன் கிளைகளாக கிள்ளான், சிரம்பான், ஈப்போவிலும் வர்த்தக சங்கங்களைக் கண்டதோடு, சிங்கப்பூர், பினங்கு, மலாக்கா முதலிய ஊர்களிலும் சங்கம் காண வழிகாட்டியாகவும் தூண்டுகோலாயிருந்தது நமது சங்கமே ஆகும். அத்தகைய கிள்ளான் செட்டியார்கள் சங்கம் பின்னர் செட்டியார்கள் வர்த்தக சங்கமாக மாறி இன்று ஒன்பது ஆண்டுகள் கடந்துவிட்டன. ஆதரவு போதுமான அளவிலில்லை. சங்கம் எதற்கு என்று கேட்பாரும் இருக்கிறார்கள்.

**சங்கம் எதற்கு?**

கவர்ன்மெண்டார் கொண்டுவரும் ஒவ்வொரு மசோதவையும் அப்படியே தள்ளிவிடுவதற்காக இச்சங்கம் ஏற்படவில்லை. நமக்குள் கட்டுப்பாடும் ஒற்றுமையும் ஏற்படுவது முதற்காரணமாகவும், இரண்டாவதாக கவர்ன்மெண்டார்கொண்டுவரும் மசோதாக்கள் நன்மையுடையதாயிருந்தால் ஒப்புக்கொள்ளவும் தீமையுடையதாயிருந்தால் திருத்தம் செய்யத் தூண்டுவதும்தான் சங்கத்தின்வேலை. மேலும் ஒருசமூகத்தின் ஏகோபித்தஅபிப்பிராயத்தைத் தெரிவிக்கவும் இது சாதகமாயிருக்கும். நமக்கென ஒருபொதுஸ்தாபனம் இருந்ததாலேயே கவர்ன்மெண்டார் தயாரிக்கும்ஒவ்வொருபுதுச்சட்டதிட்டங்களின் நகல்களையும் அனுப்பி அபிப்பிராயங்கள் கேட்கிறார்கள் என்பது கவனிக்கத்தக்கதாகும். பொது வேலையில் முன்னின்றுழைக்கும் எவர்க்கும் ஆக்கமும் ஊக்கமும் அளிக்குமாறு வேண்டுகிறேன்.

**பொருளாதார நிலைமை**

ஒவ்வொரு வருடப் பொதுக்கூட்டங்களிலும் சந்தாப் பாக்கிகளைப் பற்றியே பேசப்பட்டுவருவது வருந்தத்தக்கதாகும். அதனால் சங்க முன்னணி வேலைகள் தடைப்படுகின்றன. இப்படியே ஆண்டுகள்தோறும் சந்தா வசூல் பாக்கிப்படுமாயின் இத்தகைய கூட்டுறவு முறைகளில் நம்மவர் இன்னமும் பக்குவமடையப்பெருத பிற்போக்காளர்களாகவே மற்றவர்களால் மதிக்கப்படுவோம். இந்நாட்டின் மூலப்பொருள்களான ரப்பர், ஈயம் முதலிய விளைபொருள்களுக்கு விலைவாசிகள் ஏறி சுபிக்ஷமாயிருந்துவருவதில் சந்தோஷம். ஆனால் ஒரு சங்கடமும் ஏற்பட்டிருக்கிறது. அதுதான் ஐரோப்பா நிமித்தம் ஏற்படவிருக்கும் வருமானவரிப் பிரச்சினை.

**வருமான வரியை எதிர்ப்பது ஏன்?**

இந் நாட்டிலுள்ளோர் அனைவரும் வருமான வரியை எதிர்க்கிறார்கள். கொடுக்க மனமில்லாமல் அல்ல. சர்வாதிகாரத்துக்கும் ஜனநாயகத்துக்கும் இடையில் நடக்கும் இந்தப் போரில் பின்னவருக்காகச் செய்யும் உதவியாளர்களான வரி வாங்குவோர்—கொடுப்போர் இவர்களிடையே மற்றொரு யுத்தம் நடக்கக்கூடாதென்பதே அவர்களுடைய விருப்பம். ஆகவே வாங்குவோர்—கொடுப்போர்களிடையே கஷ்ட நஷ்டங்களை உண்டு பண்ணக்கூடியதான இந்த வருமான முறையையும் அன்றாடம் வேலை பார்க்கும் ஏழைத் தொழிலாளர்களை விடுத்து மற்றையோருக்கு வரிகள் விதித்து வரியை உயர்த்துவதில் ஆட்சேபணையிருக்காது என்று கருதுகிறேன்.

சங்கங்கள் தோன்றி 9 ஆண்டுகளாகியும் தலைவர், காரியதரிசிகள் இன்னும் எழுதிப்படிக்கும் நிலைமையில் தானிருக்கிறோம். மேலும் கூச்சமறப் பேசும் தன்மையும் கிடையாது. இதற்கு வேண்டுவது கல்வி அறிவு. ஆகவே நமது சிறுவர்களுக்குத் தக்க உபாத்தியாயர்களைக்கொண்டு சொல்லிக் கொடுக்கச்செய்து கூட்டங்களை மாதம் ஒரு முறையோ இருமுறைகளோ நடத்தி பேசும் சந்தர்ப்பத்தை அளித்தல்வேண்டும்.

**கொடுக்கல் வாங்கல்முறை**

இவ்விஷயத்தில் கட்டுத்திட்டமின்றியும் வரம்புகடந்தும் செய்யப்பட்டு வருகிறது. இது தவறு. நமது அங்கத்தினர்களுள் பெரும் பொருளுடையவர்களும் நடுத்தரமானவர்களும் மத்தியதர வகுப்பினர்களும் பலரிருக்கின்றனர். இவர்களில் பின்னவர்களிருவர்களுக்கும் முன்னவர்கள் சற்று இடம் கொடுத்துதவுவது நல்லது. ஒவ்வொரு ஊர் நகரத்தார்களும் கூடி ஒழுங்கான முறையிலும் அனைவருக்கும் சாத்தியமான வழிகளிலும் வட்டிக்கண்டிஷன் திட்டப்படுத்தி எல்லோருக்கும் நன்மை பயக்கும் வழியில் நடந்து கொள்ளல் வேண்டும்.

பின்னர் புது வருடத்திற்கு கீழ்கண்டவர்கள்நிர்வாகிகளாகத்தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். தலைவர்: ராம. மு. இலக்குமணஞ்செட்டியார், காரியதரிசி: அழ. ப. சித. அரு. நடராஜன் செட்டியார். நிர்வாகசபை மெம்பர்கள்: கு. மு. சொ. பழனியப்பசெட்டியார், மு. பழ. மு. லெட்சுமணன் செட்டியார், வெ. மு. வெங்கிடாசலஞ் செட்டியார், மு. மு. ராம முத்துக்கருப்பன் செட்டியார், மு. ப. சு. அண்ணாமலைச் செட்டியார், கரு. மு. சுப்பையாச்செட்டியார், முரு. சுப. சுப்பையாச்செட்டியாரையும் கோலாலம்பூரிலிருந்து 4 மெம்பர்களையும் காஜானிலிருந்து ஒரு மெம்பரையும், கோலசிலாங்கூரிலிருந்து முரு. ராம. அண்ணாமலைச்செட்டியாரையும் தேர்ந்தெடுக்கப்பெற்றது.

—





## தியாகம்

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

மகாராணி: குமாரீ! உண்மையான பிரேமையிருக்குமானால் நீ இவ்வாறு நடந்திருக்கமுடியாதே? இது என்ன? மிகவும் விசித்திரமாயிருக்கிறதே.

திலகவதி: ஆம், தாங்கள் சொல்வது உண்மையே. சற்று நிதானமாகக் கேளுங்கள், சொல்கிறேன். எதிர்பாராத என்னுடைய கல்யாணகாலத்தில் தோன்றிய சோழசேனையைத் தடுப்பதற்கு எங்கள் மகாராஜாவால் இயலாமற் போயிற்று. எங்கள் தேசமோ மிகச்சிறியது, சோழ சக்கிரவர்த்தியின் சேனையை எதிர்க்க ஆற்றல் இல்லை. சக்கிரவர்த்தியின் வேண்டுகோளுக்கு நான் இணங்காவிடில் பெரிய யுத்தம் ஏற்படும். என் பொருட்டே சக்கிரவர்த்தி வந்திருக்கிறார் என்பதை அந்த க்ஷணமே யூகித்து அறிந்துகொண்டேன். யுத்தத்தில் எனது பெற்றோர்களும், பந்துக்களும், நிரபராதிகளான குடிஜனங்களும் காலனுக்கு இரையாவார்கள். நாட்டில் ரத்த ஆறு ஓடும். எத்தனையோ இளம்பெண்கள் காதலர்களை இழப்பார்கள். எத்தனையோ பெற்றோர்கள் புதல்வர்களை இழப்பார்கள். பத்துவருஷங்களுக்குமுன் எங்கள் நாட்டில் சக்கிரவர்த்தியின் சேனை செய்த அட்டூழியங்கள் இன்னும் பரிகரிக்கப்படவில்லை. அந்தப் போரில் நடைபெற்ற கொலைகளையும் அக்கிரமங்களையும் கேட்டபொழுது என் மனதில் தோன்றிய துயரம் கொஞ்சமல்ல. எனது அருமை அண்ணு, அந்தோ! அந்தப் போரிலேயே கொல்லப்பட்டான். இவைகளையெல்லாம் முதலாவதாகக் கேட்டதும் என்னால் இயன்ற மட்டும் உலகில் யுத்தத்தை தடைசெய்வதற்கான தொண்டு செய்யவேண்டுமென்று உறுதிகொண்டேன். இதையறிந்த எனது தோழி அதுசமயம் அபலையான ஒரு ஸ்திரீயினால் முடிமன்னர்களிடையே நடைபெறும் யுத்தங்களை தடைசெய்ய முடியுமாவென்று ஏளனமாகவும் குத்தலாகவும் கூறினாள். ஆனால் இன்று ஓர் மகாப்பெரிய யுத்தத்தை இந்த ஸ்திரீ நிறுத்திவிட்டாள். இதனால் என் மனம் பரம சாந்தியடைகிறது. எத்தனையோ ஜீவன்கள் என்னால் காப்பாற்றப்பட்டன. இதுவொன்றே போதும்.

மகாராணி: குமாரீ! நாட்டுமக்களுடைய க்ஷேமத்துக்காகவும் சமாதான வாழ்விற்காகவும் உனது இல்லற சுகபோகத்தை அற்பமென்று தியாகம் செய்த பெருமையே பெருமை. நமது தமிழ் நாடு—தாய்த் திருநாடு—உன் போன்ற தியாகவதிகளாலேயே ரக்ஷிக்கப்படவேண்டும். தமிழ்த்தாயின் உத்தம புதல்வி! ஸாக்ஷாத் முருகபிரான் உன்னை ரக்ஷிப்பார். என்மனம் குளிர்ந்துவிட்டது.

திலகவதி: மாதா! இந்த ஜென்மத்தில் எனது காதலருடன் கலந்து வாழமுடியாமற் போனாலும் அடுத்த பிறவியில் நாங்களிருவரும் தம்பதிகளாக வாழ்வோம். தங்களுடைய புனிதத் தோற்றம் என்னை கவர்ந்துவிட்டது. தங்களுடைய திவ்ய தர்சனத்தால் எனது வரண்ட இதயம் பூரிப்படைந்துவிட்டது. இந்த அறையில் நான் எம்பெருமானையும் காதலரையும் ஸ்மரித்துப் பூசைசெய்து பொழுதுபோக்கி வருகிறேன்.

மகாராணி: ரொம்ப சந்தோஷம்' பூஜைக்குவேண்டிய சாமான்களையெல்லாம் தினந்தோறும் அனுப்ப ஏற்பாடு செய்கிறேன். எம்பெருமானை வழிபடுதற்கு நியமநிஷ்டைகள் வேண்டாமா? ஆசார அநுஷ்டானங்களும் ஸ்நான நியமங்களும் உன்னிடம் காணப்படவில்லையே?

திலகவதி: தாயே! நாள்தவறாமல் ஸ்நானம் செய்வதால் ஆண்டவரின் அருள் கிடைக்குமென்றால் ஜலஜந்துக்களுக்கு கிடைக்கவேண்டும். பழங்களையும் கிழங்குகளையும் தின்பதால் ஈஸ்வர கிருபை கிடைப்பதாயிருந்தால் குரங்குகளுக்குக் கிட்டவேண்டுமே, பெண்ணின்பத்தை துறப்பதால் கிடைப்பதாயிருந்தால் அலிகள் பலருக்கும் கிடைக்கவேண்டுமே. பால் குடிப்பதினால் கிடைப்பதாயிருந்தால் பல சிறு குழந்தைகளுமிருக்கின்றன. ஆதலால் அதுவெல்லாம் அவ்வளவு அவசியமானவையல்ல. பிரேமையில்லாவிட்டால் தெய்வகிருபை கிடைக்காது. அதனாலேயே நமது பூர்வீகர் அன்புருவாக ஈஸ்வரனை சங்கற்பித்திருக்கிறார்கள். திருமூலர் "அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலர்" என்று கூறியிருப்பது தங்களுக்குத்தெரியாதா?

பெருந்தேவியாரின் உள்ளம் விசாலமடைந்தது. திலகவதியின் புத்திகூர்மையைக் கண்டுவியந்தாள். ஈசுவர பக்தியை எண்ணி எண்ணி பேரானந்தமடைந்தாள். தெங்கநாட்டு அரசகுமாரியைத் தனது குருவாகக் கருதினாள். தனது கணவன் செய்த பெருங்குற்றத்திற்காக மன்னிப்புகேட்டாள். சக்கிரவர்த்திக்கு மனமாற்றமேற்படுமென்று உறுதி சொன்னாள். 'எல்லாம் தெய்வச் சித்தம்'என்று கூறினாள். திலகவதி. இருவரும் பிரிந்தார்கள்.

மகாராணியின் மனமானது ராஜகுமாரியின் நிலைமைக்காக பெரிதும் இரங்கியது. தனது கணவருடைய நடவடிக்கையைப்பற்றி சொல்லமுடியாத வருத்தமடைந்தாள். அவருக்கு மனமாற்றம் ஏற்படவேண்டுமென்று பிரார்த்தனை செய்தாள். சக்கிரவர்த்தியைக்கண்டு திலகவதிக்காக மன்றாடிக் கேட்கவேண்டுமென்று நிச்சயித்தாள். (தொடரும்)

—

**மதிப்புரை**

## கம்பன் படம்

காரைக்குடியில் சமீபத்தில் நடைபெற்ற கம்பன் திருவிழாவையொட்டி சென்னை நவயுகப் பிரசுராலயத்தாரால் இப்படம் வெளியிடப்பட்டது. இதன் விலை எட்டு அணு. காரைக்குடி பார்திபிக்சர் பாலஸிலும் கிடைக்கும்.

தமிழ்த்தாய்க்கு மணி முடி கவித்த கவிச் சக்ரவர்த்தி கம்பனைப் பற்றிய உண்மை வரலாறு பெரும்பாலும் தெரியவில்லை; கம்பன் எப்படியிருந்தான்; அவனுக்கு மீசையுண்டா; குடுமியிருந்ததா; என்றெல்லாம் நமக்குத் தெரியாது. அதற்கான சான்றுகளும் கிடைக்கவில்லை. இந்த நிலைமையில் கம்பன் திருவுருவத்தைக் கற்பனை செய்வதென்பது மிக மிகக் கடினமானதாகும்.

கம்பன் உலகக் கவிகளிலேயே தலைசிறந்தவன். பெருங் கவிகளெல்லாம் கற்பனைத் திறனில் கம்பன் சன்னிதானத்தில் சிரம் தாழ்த்தி பணிய வேண்டியவர்களேயென்பது பல மொழிப் பாண்டித்தியம்பெற்ற நேர்மையாளர் பலர் கருத்து. கவியமுதை அள்ளி அள்ளிக் கொட்டும் கம்பனது முகத்தில் மேதைத் தன்மை பளிங்கு போல் இலங்கும். தெய்வப் புலமைத் தேஜஸ்சுடர்விட்டு நாலா பக்கமும் வதனத்திலிருந்துப் பிரகாசிக்கும். தெளிந்தஉள்ளமும் திடகாத்திரமும் கம்பனுக்கு அமையப் பெற்றிருக்கும். ஆழ்ந்த உள்ளமும், ஆரோக்கியமும் இணைபிரியாதவை என்பது அறிஞர்களின் அபிப்பிராயமல்லவா? A sound mind in a sound body என்ற ஆங்கில மொழி இக் கருத்தையே வற்புறுத்துகிறது. அறவீரம், ஆண்மை, அடக்கம், ஒழுக்கம் பொறை, மேதை, முதலான உயர் குணங்களுக்கெல்லாம் உறைவிடமாகவே மகாகவி இருந்திருக்க வேண்டும். இவை பற்றி ஆழ்ந்து சிந்தித்து முடிவுக்கு வருவது இலேசானதல்ல. இதில் வெற்றி பெற்ற ஸ்ரீ சா. கணேசனின் கற்பனைக் கண்கள் பெரும் சக்திவாய்ந்தவை யென்பதை மறக்கவோ மறைக்கவோ இயலாது. ஸ்ரீ சா. கணேசனின் அகக்கண் கண்ட கம்பனை ஸ்ரீ எஸ் கே. ஐயா தன் சித்திரக்கையால் தீட்டி நமக்குக் கொடுத்துதவினர். தமிழர் கண்டு கண்டு மகிழ்வதற்கு இவ்விருவரின் தொண்டு ஏதுவாயிருக்கிறது.

இப்படத்தில் கம்பன் தெய்வ கீதங்களைச் சராசரியாகச் சொல்வதை பயபக்தி விசுவாசத்துடன் சீடன் ஓலையில் பொறிப்பதற்கு ஆயத்தமாயிருப்பதாகச் சித்தரிக்கப்பட்டுளது. குருநாதனின் திருவாயிலிருந்து எழும் கவியமுதங்களை அவ்வப்போதே வெகு ஜாக்கிரதையாக சேகரித்து தமிழ் நாட்டாருக்கு அளிப்பதற்கான புண்ணிய கைங்கரியத்திலீடுபட்டிருக்கிறான் சீடன். தோற்றத்திலும் முகவிலாஸத்திலும் குருநாதனின் தெய்வ கீதங்களொன்றும்—ஒரு வார்த்தை கூட தவறியோ—பிழையாகவோ, பொறித்துவிடக்கூடாதே என்ற ஆத்திரவுணர்ச்சி அப்படியே பிரதிபலிக்கிறது அவன் முகத்தில். மகாகவியின் கழுத்தில் வைரமாலையும், காதுகளில் கடுக்கன்களும், கைவிரல்களில் மோதிரங்களும் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றன. மார்பில்போட்டிருக்கும் அங்கவஸ்திரத்தின் மாதிரியே கவர்ச்சியுடையதாகவும் இயற்கையான பெருந்தன்மையை எடுத்துக்காட்டுவதாகவும் அமைந்துள்ளது. கம்பனுக்கு மீசை வைத்திருப்பதைப் பற்றியும், வெற்றிலை, பாக்கு முதலான வைப்பற்றியும் மாறுபட்ட அபிப்பிராயங்கள் இருக்கலாம்.

பொதுவாகச் சொல்லுமிடத்து இப்படத்தின் பிரதி ஒவ்வொரு தமிழ்மகனின்—தமிழ் மகளின் இல்லிலும் காக்ஷியளித்தல் வேண்டும். தமிழ் இல்லிற்கு இது ஓர் அணியென்றே சொல்ல வேண்டும். கம்பன் திருவுருவம், உள்ளத்திலும், ஊரிலும், நாட்டிலும், உலகிலும்காட்சியளிக்கத் தமிழர் பாடுபட வேண்டும். தமிழருக்குக் கம்பன் கிடைத்தது பெரும்பேறு. அதை அறியாமலிருப்பது பெரும் மடமை. கம்பன் கவிதைஎங்கும் ஒலியும் எதிரொலியுமாக முழங்கவேண்டும். கம்பன் தமிழ் நாட்டில் பிறந்தான். அவனை தமிழர் இன்னம் சரியாக உணராமலும்கௌரவிக்காமலும் இருக்கிறார்கள். இது தமிழருக்கு மானக்கேடானதாகும். இக்குறையை நீக்க ஒவ்வொரு தமிழ்மகனும் வீறுகொண்டுழைக்கவேண்டும். இன்று நந்தமிழ் நாட்டில் சிலர் விழித்துக் கொண்டார்கள். கம்பன் பிரசாரம் காட்டாறு போல பிரவகிக்க ஆரம்பமாய் விட்டது. இனி இது நிற்கவே நிற்காது. இவர்களைப் பாராட்டுவதும் பின்பற்றுவதும் தான் இன்றுவாழ் தமிழரின் தலைசிறந்த கடன். தமிழ்நாட்டின் பேறென்றே இதை நாம்கருதுகிறோம்.

—

**இந்தியாவில் சைக்கிள் உற்பத்தி**

பாட்னுவிலிருந்து 6 மைல் தூரத்தில் இந்தியாவில் முதன்முதல் சைக்கிள் உற்பத்தி பாக்டரி ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. மே மாதம் அந்த பாக்டரி ஆரம்பமாகிறது. ஒரு தினத்தில் 150 சைக்கிள்கள் உற்பத்தியாகும். இதை பீகார் கவர்னர் தம்பதிகள் பார்வையிட்டனர்.

— —

**பார்வேடு பிளாக்காரர் பலவிடங்களில் கைது**

இந்தியப் பாதுகாப்புச் சட்டப்படி மூர்ஷிதபாத், அலகாபாத், காசி, குல்னு, பாட்னு, லக்ஷமணபுரி முதலிய பலவிடங்களில் பலர் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள்.

### பஞ்சாங்கம்

| பர்மா. | இங் | தமிழ். | வாரம். | விக்கிரம-ஞு இங்-1940 பர்மா-1302. |
|---|---|---|---|---|
| 12 | 18 | 6 | வியா | ஏகா-36-27. மக-18-29. அமிர்தயோகம். |
| 13 | 19 | 7 | வெள் | துவா-29-1. பூர-13-3. சித்தயோகம் |
| 14 | 20 | 8 | சனி | திர-23-5. உத்-9-1. மரணயோகம். |
| 15 | 21 | 9 | ஞாயி | சது-17-17. அஸ்-5-0. சித்தயோகம். |
| 1 | 22 | 10 | திங் | ○ பௌ 11-44. சித்-1-17. மரணயோகம். |
| 2 | 23 | 11 | செவ் | பிர-6-36. விசா-54-56. சித்தயோகம். |
| 3 | 24 | 12 | புதன் | துவி-2-20. அனு-53-56. சித்தயோகம். |
| 4 | 25 | 13 | வியா | சது-56-38. கேட்-53-23. சித்தயோகம். |

(பர்மா நிரலின் ஓரம்: நவுந்தகுலாசோ; இங் நிரலின் ஓரம்: 1940 ஏப்ரல்-ஸ்ரீ; தமிழ் நிரலின் ஓரம்: விக்கிரம-ஞு சித்திரைஸ்ரீ)

### நடப்பு வட்டி விகிதங்கள்

| மாதம். | நாள். | சென்னை | | | ரெங்கூன் | | | பினங்கு | | | சிங்கப்பூர் | | | செய்கோன் | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| வெகுதானிய பங்குனி | 31 | 0 | 6 | 6 | 0 | 4 | 9 | 0 | 4 | 6 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 |
| பிரமாதிசித்திரை | 31 | 0 | 6 | 9 | 0 | 4 | 0 | 0 | 4 | 6 | 0 | 4 | 3 | 0 | 4 | 0 |
| வைகாசி | 31 | 0 | 6 | 6 | 0 | 5 | 0 | 0 | 4 | 6 | 0 | 4 | 3 | 0 | 4 | 0 |
| ஆனி | 32 | 0 | 6 | 6 | 0 | 5 | 6 | 0 | 4 | 3 | 0 | 4 | 3 | 0 | 4 | 0 |
| ஆடி | 31 | 0 | 6 | 0 | 0 | 4 | 0 | 0 | 4 | 3 | 0 | 4 | 3 | 0 | 4 | 0 |
| ஆவணி | 31 | 0 | 5 | 6 | 0 | 4 | 0 | 0 | 4 | 3 | 0 | 4 | 3 | 0 | 4 | 0 |
| புரட்டாசி | 31 | 0 | 5 | 6 | 0 | 4 | 0 | 0 | 4 | 3 | 0 | 4 | 3 | 0 | 4 | 0 |
| அற்பசி | 29 | 0 | 5 | 6 | 0 | 4 | 0 | 0 | 4 | 3 | 0 | 4 | 3 | 0 | 4 | 0 |
| கார்திகை | 30 | 0 | 5 | 6 | 0 | 4 | 0 | 0 | 4 | 6 | 0 | 4 | 3 | 0 | 4 | 0 |
| மார்கழி | 29 | 0 | 5 | 9 | 0 | 4 | 6 | 0 | 4 | 6 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 |
| தை | 30 | 0 | 6 | 0 | 0 | 5 | 0 | | | | 0 | 4 | 0 | 0 | 4 | 0 |
| மாசி | 30 | 0 | 6 | 0 | 0 | 4 | 9 | | | | 0 | 4 | 0 | | | |
| பங்குனி | 30 | | | | 0 | 5 | 0 | | | | | | | | | |

REGNO. M. 3888 | 12 PAGES | PRICE 1 ANNA



# ஊழியன்



## The "Oolian," A Nationalist Tamil Weekly

VOL. 19 | KARAIKUDI, 18TH APRIL 1940, THURSDAY | NO. 42

### திருச்சி ரேடியோ

**ஏப். 18-உ வியாழன்**

5-20 ஒய். என். ஸ்ரீநிவாஸ் மூர்த்தி பாட்டு, 6-30 வி. எஸ். கோமதி சங்கர அய்யர்-வீணை, 7-0 'கடுங்காவல்' ஸ்ரீமதி வி. டி. லக்ஷ்மி பேசுவார், 7-50 'ஸ்ரீமதி கல்யாணம்' தஞ்சாவூர் லக்ஷ்மி தேவராஜ பாகவதர் கதாகால க்ஷேபம், 9-20 செய்திகள், 9-45 எம். என். நடராஜ பிள்ளை.

**19-உ வெள்ளி**

5-20 டி. என். ராஜரத்தினம் பிள்ளை-நாகஸ்வரம், 6-30 ஸ்ரீமதிகள் எஸ். கோமளமும், எஸ். ஸ்ரீநிவாசும்-பாட்டு, 7-15 'கமலாவின் தலைவலி' சுகி எழுதிய ஒரு சிறு ஹாஸ்ய நாடகம், 7-50 டி. என். ராஜரத்தினம் பிள்ளை-நாகசுரம், 8-30 இந்திய ரேடியோ வாத்தியக்கோஷ்டி, 8-45 ஸ்ரீமதி எஸ். கோமளமும், எஸ். ஸ்ரீநிவாசும் 9-20 செய்திகள்.

**20-உ சனி**

6-30 ஸ்ரீமதி ஸ்வர்ண ஸரஸ்வதி பாட்டு, 7-50 டி. கே. ராதாகிருஷ்ணன்-புல்லாங்குழல், 8-30 'பிரமத்வரை' சிறு நாடகம் அஜந்தா தயாரிப்பு, 8-45 ஸ்ரீமதி ஸ்வர்ண ஸரஸ்வதி, 9-20 செய்திகள், 9-45 டி. கே. ராதாகிருஷ்ணன்.

**21-உ ஞாயிறு**

5-20 வேலூர் எம். ராமமூர்த்தி-பாட்டு. 6-30 துவாரகாநாத் வாத்தியக்கோஷ்டி, 7-0 'முகம்மது நபிகள்' பேச்சு, 7-50 ஸ்ரீமதி கோலார் ராஜம்மா-பாட்டு, 8-45 தென்மடம் வரதாச்சாரியார்-வீணை, 9-20 செய்திகள், 9-45 ஸ்ரீமதி கோலார் ராஜம்மா.

**22-உ திங்கள்**

5-20 ஸ்ரீரங்கம் துரைக்கண்ணு—நாகஸ்வரம், 6-30 சென்னை கோபால கிருஷ்ணன்-பிடில், 7-0 'போர்க்கோலத்தில் நடுநிலைமை' எஸ். தோத்தாத்ரி அய்யங்கார் பேசுவார் 7-50 கச்சேரி மன்னார்குடி ராஜகோபால் பிள்ளை-பாட்டு, பி. கே. விசுவநாத சர்மா-பிடில், உமையாள்புரம் கணேச அய்யர்-மிருதங்கம், 9-0 சென்னை கோபால கிருஷ்ணன், 9-20 செய்திகள், 9-45 இசைத்தட்டு.

**23-உ செவ்வாய்**

5-20 கே. வி. தியாகராஜன்-பாட்டு 6-30 ஸ்ரீமதி பரூர் பொன்னம்மா-பாட்டு, 7-50 பட்டமங்கலம் ஈசுவர அய்யர்-வீணை, 8-30 'நளன்தூது' ஆர். திருஞானசம்பந்தம் எழுதியது. 8-45 ஸ்ரீமதி பரூர் பொன்னம்மா-பாட்டு, 9-20 செய்திகள், 9-45 பட்டமங்கலம் ஈசுவர அய்யர்.

கிருஷ்ணன் வேஷத்தில் புகழ்பெற்ற
ஸ்ரீ எம். சுப்ரமணியன்
(எலக்ட்ரிக் இன்ஸ்பெக்டர்.)



சினிமா புகழ் பேபி லலிதா
பரத நாட்டியம்
எம். சுப்ரமணியன் குமாரி.



### சென்னை ரேடியோ

**ஏப். 18-உ வியாழன்**

4-0 எஸ். டி. செல்லப்பா-பாட்டு, 5-20 திருவீழிமிழலை எஸ். கோவிந்தராஜ பிள்ளை சகோதரர்கள்-நாகசுரம், 6-30 'தப்பினது' ஒரு தமிழ் நாடகம் வி. எஸ். ராமகிருஷ்ணன் எழுதியது, 7-50 திருவீழிமிழலை எஸ். கோவிந்தராஜ பிள்ளை சகோதரர்கள் 8-30 ஸ்ரீமதி எஸ். பி. சந்திரவதனு-பாட்டு, 9-30 எம். வி. ராமகிருஷ்ணய்யர்-பிடில், 10-0 எஸ். பி. சந்திரவதனு-பாட்டு.

**19-உ வெள்ளி**

4-0 வி. ஏ. சுப்ரமணிய பாகவதர்-பாட்டு, 5-20 கே. எஸ். நாராயணய்யங்கார்-கோட்வாத்தியம், 6-30 வி. எஸ். ஸ்ரீநிவாஸராவ்-புல்லாங்குழல், 7-50 வி. ஏ. சுப்ரமணிய பாகவதர்-பாட்டு 8-30. கே. எஸ். நாராயண அய்யங்கார்.

**20-உ சனி**

5-20 ஜெயராம் வாத்தியக் கோஷ்டி, 7-50 ஹரிநாக பூஷண சாஸ்திரி-பிடில், 9-0 'ஹிட்லரின் பிறந்தநாள்' பீட்டர் பின் தயாரித்த ஒரு நாடகம்.

**21-உ ஞாயிறு**

4-0 ஸ்ரீமதி ஜே. தர்மாம்பா-பாட்டு, 5-20 தாலிபர்த்தி பிச்சைஹரி சகோதரர்கள் நாகஸ்வரம், 6-30 மாஸ்டர் வித்திக் பாட்டு, 7-0 முகமத் 'நபியின் பிறந்தநாள்' பி. தாவூத்ஷா பேசுவார், 7-50 ஸ்ரீமதி லலிதாங்கி-பாட்டு 8-30 கே. சாம்பமூர்த்தி-பாட்டு 9-30 ஸ்ரீமதி லலிதாங்கி, 10-0 டி. எஸ். தாதாச்சார்-பிடில்.

**22-உ திங்கள்**

4-0 ஸ்ரீமதி ப. அழகு ரத்னம்மாள்-கோட்டு வாத்தியம், 5-20 சிறுகளத்தூர் சாமா அய்யர்-பாட்டு, 7-50 'வீணை வாத்தியங்களின் ராணி' என். எஸ். ஆர். தயாரித்த விசேஷ நிகழ்ச்சி, 8-30 சிறுகளத்தூர் சாமா அய்யர்.

**23-உ செவ்வாய்**

4-0 கே. ஆர். லக்ஷ்மண சாஸ்திரியும், ரங்கநாத சாஸ்திரியும்-பாட்டு, 5-20 ஸ்ரீமதி அலமேலு பட்டாபிராமன்-பாட்டு, 6-30 'இருசகோதரர்கள்' ஒரு தமிழ் நாடகம் எஸ். ஸ்வாமி ரத்னம் எழுதியது, 7-50 பாலைபூர் கே. வெங்கடராமய்யர்-பாட்டு, 9-30 திருக்கோடிக்காவல் கிருஷ்ணமூர்த்தி அய்யர், 10-0 டொக்கா ஸ்ரீராமமூர்த்தி-பாட்டு.

**24-உ புதன்**

4-0 தனம் சகோதரிகள்-பாட்டு, 5-20 சிஷ்டு கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரி-வீணை, 6-30 டி. வி. நமச்சிவாயம் பாட்டு, 7-0 'யுத்தமும் இந்திய விவசாயமும்' என்பது பற்றி ஸி. ஆர். ஸ்ரீநிவாசன் பேசுவார், 7-50 தனம் சகோதரிகள், 8-30 பி. எச். வெங்கோபராவ்—புல்லாங்குழல்.



Edited, Printed and Published by Raya Chockalingan for The India Publications Ltd., at the Oolian Power Press, Karaikudi.

